# பணம்


ம. தி. தா. இந்துக் கல்லூரி பொருளாதார ஆசிரியர்

திரு. ரெ. சேஷாசலம், எம். ஏ.

இயற்றியது.







சிந்தனைப் பதிப்பகம்

௨௭. பேந்தியன் ரோட், சென்னை-௮

முதற் பதிப்பு—1953.

விலை ரூ. 1/8
உயரிய பதிப்பு ,, ரூ. 2/-

ஆசிரியர் எழுதிய பிற நூல்கள் :

**A Study in Public Finance**
அரசியலறிவு (பிற ஆசிரியர்களுடன்)
தமிழக வரலாறு ,,
**Economics** (அச்சில்)
**History of India-**
**Muslim Period** ( ,, )

பணம்

*Commended by the Director of Public Libraries, Madras, for use in all public libraries in the State in his Proceedings Dis. No. 1922/54 dated 6-4-1954.*



நமது லண்டன் கிளை :
6, பிரைரி கார்டன்ஸ்,
லண்டன், W. 4.

# பதிப்புரை

மனிதன், நாகரிக வாழ்க்கை வசதிகளைப் பெறக்கூடிய அளவுக்கு விஞ்ஞான, எந்திர சாதனங்கள் வளர்ச்சியடைந்திருந்தும்கூட, அவற்றைப் பெறமுடியாதபடி பல தடைகளிருக்கின்றன. இதற்குக் காரணம் சமூக அமைப்பிலேயுள்ள ஏற்றத் தாழ்வுகள்தாம் என்பது விளங்கும். இதனை வேறுமாதிரியாகச் சொன்னால், மனித நாகரிக வாழ்வுக்கு ஏற்ற வழியில் பொருளாதார முறை அமையவில்லை என்று தெரிகிறது.

பணம் உலகத்தை நடத்துகிறது; குடும்ப உறவைத் தீர்மானிக்கிறது. சர்வ வல்லமையுள்ள இப்பணத்தை மனிதன்தான் படைத்தான். ஆனால், இது அவனையே அடிமை கொண்டுவிட்டது. இது ஏன்? எதனால் என்பதை நாம் தெரிந்திருக்க வேண்டியது அவசியம்.

பணத்தின்மீதுள்ள காதல் நம்முடைய சமூக வாழ்வையும், மனவியலையும் மிகவும் பாதித்திருக்கிறது. பணத்தின் பொருளியல் முறைகளைத் தெரிந்திருந்தாலன்றி, பொருளாதாரத் துறையில் மாற்றம் தேவை என்பதை நாம் சரியாக உணர முடியாது. அதற்கு இந்நூல் துணை செய்யும். பணத்தைப்பற்றி தமிழில் எழுதப்பட்டுள்ள இந்நூலை, எங்களது முதல் வெளியீடாகக் கொண்டுவந்திருப்பதில் நாங்கள் மகிழ்ச்சியடைகிறோம்.

வெறும் வண்ணப் பூக்களை மட்டும் காட்டி மயக்காமல், சிந்தனைப் பதிப்பக நூல்கள் ஒவ்வொன்றும் கருத்துச் செறிவும் கலையழகும் கொண்டு மிளிரும் என்று தமிழ் மக்கள் உறுதியாக நம்பலாம். பதிப்புக்குப் பதிப்பு நூல்கள் தரத்திலும், பொருட் செறிவிலும், நடையழகிலும் உயர்ந்து விளங்கும். தமிழ் மக்களை நீளச் சிந்திக்க வைப்பதுதான் எங்களது முக்கிய நோக்கம். 'சிந்தனைதான் செயலின் தந்தை' என்ற கருத்தைத் தமிழ் மக்களிடையில் பரப்புவது எங்கள் வாழ்க்கைப்பட்டணி. அரிஸ்டாடில் (Aristotle)

கூறியதுபோன்று, 'மகிழ்ச்சி என்பதும்கூட, ஒருவகை அறிவு மலர்ச்சியால் ஏற்படுவதே யாகும்.'

எங்களது இந்நோக்கம் வெற்றியடையத் தமிழ் மக்களது அன்பும் ஆதரவும் தேவை.

'ஒரு நல்ல முயற்சிக்கு ஆயிரம் இடையூறுகள் வரும்' என்று சொல்வதுண்டு. அது எங்களுக்கும் ஏற்பட்டது. இருந்தாலும் முயற்சியை விடாது முன்னேறுவது என்று உறுதி கொண்டிருக்கிறோம்.

இப் பதிப்பகம் தோன்றக் காரணமாக இருந்த திருவாளர்கள் ரெ. சேஷாசலம் எம்.ஏ. அவர்களுக்கும், ந. பத்ரிநாதன் பி.எஸ்.சி. (ஆனர்ஸ்)., ஏ.ஆர்.ஐ.சி.ஏ. அவர்களுக்கும் எங்களது உளமார்ந்த நன்றியைத் தெரிவித்துக்கொள்ளுகிறோம்.

பதிப்பக ஆலோசனைக் குழுவில் அங்கம் வகிக்க ஒப்புக் கொண்டுள்ள அறிஞர் பலருக்கும், பதிப்பகக் குறிப்புகளை வெளியிட்டு உதவிய பத்திரிகை ஆசிரியர்களுக்கும் எங்களது நன்றி உரித்தாகுக.

பதிப்பக முயற்சி வெற்றியடைய வாழ்த்துக் கூறியதுடனில்லாது, ஆண்டுக் கட்டண உறுப்பினர்களாய்ச் சேர்ந்தும், நன்கொடைகள் வழங்கியும், வேறு பலவகையிலும் உதவிய நண்பர்களுக்கும் எங்கள் வாழ்த்துக்கள்.

சென்னை,
டிசம்பர் 20, 1953.

இங்ஙனம்
சிந்தனைப் பதிப்பகத்தார்.

# ஆசிரியர் முன்னுரை

"பிற நாட்டு நல்லறிஞர் சாத்திரங்கள் தமிழ் மொழியில் பெயர்த்தல் வேண்டும்" என்று காலஞ்சென்ற சுப்பிரமணிய பாரதியார் பாடினர். தமிழ் மொழியில் புதிது புதிதாக நூல்கள் பல வந்தாலும், அவை யாவும் பெரும்பாலும் சிறுகதைகளாகவும், நவீனங்களாகவும் அல்லது இலக்கிய நூல்களாகவுமே இருக்கின்றன. அரசியல், பொருளியல், விஞ்ஞானம், தத்துவம், கணிதம், வரலாறு இத்துறைகளில் நூல்கள் அருகியே வருகின்றன. பிரதேச மொழிகள் முக்கியத்துவம் பெற்றிருக்கும் இந்நாளில், இத்துறைகளில் பல நூல்கள் வெளிவருதல் இன்றியமையாதது என்பதை யாவரும் ஒப்புவர்.

அவ்வாறு வெளிவரும் நூல்களில் முதல் வெளியீடாகப் 'பணம்' என்ற இச்சிறு நூல் தமிழ்த்தாய்க்குக் காணிக்கையாகச் செலுத்தப்படுகிறது. 'சர்வதேச வியாபாரத்தையும் (International Trade) இந்நூலில் சேர்க்கக் கருதினேனாயினும் விரிவஞ்சி இதில் சேர்க்கவில்லை. அது தனி நூலாக வெளிவரும்.

என்னை இத்துறையில் ஊக்கி இந்நூலை அச்சேற்றிய சிந்தனைப் பதிப்பகத்தாருக்கும், அதன் நிர்வாக ஆசிரியர் அ. இளங்கோவனுக்கும் நான் பெரிதும் கடப்பாடுடையேன். 'கருதிய பொருளைத் தெளிவுற' விளக்குதற்கு என்னால் இயன்ற அளவு முயன்றிருக்கிறேனாயினும் அதில் முழு வெற்றிபெற்றதாகக் கூற முடியாது. ஏற்ற விடங்களில் நக வளைவுகளில் ஆங்கிலச் சொற்களையும், சொற்றொடர்களையும் பெய்திருக்கிறேன். கலைச் சொல்லகராதி ஒன்றும் பிற்சேர்க்கையாகச் சேர்த்திருக்கிறேன். அடியேனுடைய நூலை ஆதரித்து மேன்மேலும் இதுபோன்ற நூல்கள் வர ஊக்குவிக்குமாறு தமிழ் மக்களை வேண்டிக்கொள்ளுகிறேன். குற்றங்களைந்து குறைபெய்து கொள்ளுதல் கற்றறிந்த மாந்தர்க் கடனென வேண்டுவன்.

ரெ. சேஷாசலம்.

# பொருளடக்கம்

# பணம்

## முதலதிகாரம்

'பணம்'* என்ற சொல்லுக்குக் காசு, கிரகம், சூதாடுதல், பருமை, பாக்கியம், பாம்பின் படம், பாம்பு, பொக்கிஷம், வியாபாரச்சரக்கு, விலை, வேலை, சூதாடுபந்தயம் என்று பொருள்கள் இருப்பதாகப் பேரகராதி கூறுகிறது. 'பணம்' என்ற சொல் இரண்டணா, இரண்டரையணா, மூன்றணா நாலுபைசா, நாலணா இவற்றைக் குறிப்பதாகத் தமிழ்நாட்டின் பல இடங்களிலும் காணக்கிடக்கிறது. இச்சொல், ஈண்டு வழங்கப்படும் பொருளில், சங்கமருவிய நூல்களிலோ, இடைக்கால, பிற்கால நூல்களிலோ பயில்வதாகக் காணோம். 'பாம்பின் படம்' என்ற பொருளில் சூளாமணி, நள வெண்பா, கம்பராமாயணம் முதலிய நூல்களிலும், 'பருமம்' என்ற பொருளில் திருக்குறள் முதலிய நூல்களிலும் வந்துள்ளது. 'உலோக நாணயம்' என்ற பொருளில் ஔவையார் † அருளிச்செய்த நல்வழியில் வந்துள்ளது. அப்பாட்டு வருமாறு:

---

* தமிழில் 'பணவிடுதூது' என்று பெயர் கொண்ட இரு நூல்கள் இருக்கின்றன. ஒன்று மாதைத் திருவேங்கட நாதர் மீது இயற்றப்பட்டது. இது பிரசித்தமாய் வழங்குகின்றது. இன்னொன்று இராமநாதபுரம் சேது சமஸ்தான வித்துவானாய் விளங்கிய அஷ்டாவதானம் சரவணப்பெருமாள் கவிராயரால் இராமேச்சுரம் இராமலிங்கேசர் பேரில் இயற்றப்பெற்றது. இவரது காலம் இற்றைக்கு நூற்றைம்பது ஆண்டுகளுக்கு முன்பாகும். இவர் பாண்டி நாட்டில் பரம்பைக்குடிக்குத் தெற்கேயுள்ள முதுகுளத்தூரிலே தோன்றியவர்; ஸ்ரீ சிவஞான சுவாமிகளின் சீடருள் ஒருவராகிய சோமசுந்தரம் பிள்ளையின் மாணாக்கர்.

† ஔவயார் என்று பெயருள்ள புலவர் பலர் இருந்தனர் என்பதும், 'நல்வழி' பாடிய ஔவையார் சங்ககாலப் புலவரல்லர், பிற்காலப் புலவர் என்பதும் அறிஞர் கருத்து.

> பாடுபட்டுத் தேடிப் பணத்தைப் புதைத்துவைத்துக்
> கேடுகெட்ட மானிடரே கேளுங்கள்—கூடுவிட்டிங்
> காவிதான் போயினபின் யாரே அனுபவிப்பார்
> பாவிகாள் அந்தப் பணம்.

## பொருளின் சிறப்பு

'இல்லார்க்கு இல்லை இவ்வுலகம்' என்று நாயனார் நவின்றார்.

> அருளில்லார்க் கவ்வுலக மில்லை பொருளில்லார்க்
> கிவ்வுலக மில்லாகி யாங்கு.

என்று குறளும்,

> அத்திட்ட கூறை அரைச்சுற்றி வாழினும்
> பத்தெட்டு உடைமை பலருள்ளும் பாடெய்தும்
> ஒத்த குடிப்பிறந்தக் கண்ணும்ஒன் றில்லாதார்
> செத்த பிணத்திற் கடை.

என்று நாலடியும்,

> கல்லானே யானாலும் கைப்பொருளொன் றுண்டாயின்
> எல்லாருஞ் சென்றங் கெதிர்கொள்வர்—இல்லானை
> இல்லாளும் வேண்டாள்மற் றீன்றெடுத்த தாய்வேண்டாள்
> செல்லா தவன்வாயிற் சொல்.

என்று நல்வழியும் முழங்குகின்றன. இனி 'வாழாதார்க் கில்லை தமர்,' என்று ஆன்றோர் அருளியதும் ஆராய்ந்து நோக்கற் பாலது. 'ஏழையைக் கண்டால் மோழையும் பாயும்,' 'கைப்பொருள் அற்றால் கட்டுக்கழுத்தியும் பாராள்,' 'மயிர் ஊடாடாத நட்பும் பொருள் ஊடாடக் கெடும்,' 'பெண்ணின் கோணல் பொன்னிலே நிமிரும்,' 'ஏழைப்பேச்சு அம்பலம் ஏறாது,' 'கையில் உண்டானால் காத்திருப்பார் ஆயிரம் பேர்,' 'உண்டானபோது கோடி,' 'எளியவன் பெண்டாட்டி எல்லோருக்கும் மைத்துனி' என்னும் பழமொழிகளும், 'இல்லாதார் நல்ல விருப்பின்னு'

என்ற கபிலர் கட்டுரையும், பொருளின் உயர்வையும், இன்மையின் இழிவையும் புலப்படுத்துகின்றன. ‡

**பணத்தின் பெருமை**

பொருளைப்பற்றிப் பொதுப்படையாகக் கூறுது பணத்தைப்பற்றி மட்டும் கூறும் பழமொழிகளும் தமிழில் பல உண்டு. 'பணக்காரன் பின்னும் பத்துப் பேர்; பயித்தியக்காரன் பின்னும் பத்துப்பேர்,' 'பணத்தைப் பார்க்கிறதா பழமையைப் பார்க்கிறதா,' 'பணம் உண்டானுல் மணமுண்டு,' 'பணம் பந்தியிலே குலம் குப்பையிலே,' 'பணம் என்ருல் பிணமும் வாய் திறக்கும்,' 'ஆயிரம் பொன் பெற்ற குதிரைக்கு அரைப்பணத்துச் சவுக்கு,' 'கனவில் கண்ட பணம் செலவிற்கு உதவுமா?', 'கரி விற்ற பணம் கருப்பாய் இருக்குமா?', 'கள் விற்றுக் கலப்பணம் சம்பாதிப்பதைவிடக் கற்பூரம் விற்றுக் காற்பணம் சம்பாதிப்பது மேல்,' 'ஈட்டி எட்டிய மட்டும் பாயும், பணம் பாதாளம் மட்டும் பாயும்,' என்ற பழமொழிகளை நோக்குக. முற்றும் துறந்த பட்டினத்தடிகளும் 'பணவாசையாலே' தான் கெட்டதாகப் பிரலாபிக்கிருர்.

'காசை'ப்பற்றியும், 'துட்டை'ப்பற்றியும் சில பழமொழிகள் உள்ளன. அவை வருமாறு: 'பூவிற்ற காசு மணக்குமோ?', 'புலால் விற்ற காசு நாறுமோ?', 'நாய் விற்ற காசு குலைக்குமோ?', 'ஒரு காசு பேணின் இரு காசு தேறும்,'

---

‡ கட்டுரை = உறுதிச் சொல். 'கட்டுரை' இப்பொருளாதலை,

கல்லாதவரிடைக் கட்டுரையின் மிக்கதோர்
பொல்லாததில்லை ஒருவற்கு—நல்லாய்!
இழுக்கத்தின் மிக்க இழிவில்லை; இல்லை
ஒழுக்கத்தின் மிக்க உயர்வு.

என்ற முன்றுறையரையனுர் மூதுரையிலும் காண்க.

'அரைக்காசுக்குக் குதிரை வாங்கவும் வேண்டும், ஆற்றைக் கடக்கப் பாயவும் வேண்டும்,' 'கையிலே காசு வாயிலே தோசை,' 'காசா லேசா' (இதைக் காசாலே சா என்றும் பிரித்துக் கூறலாம்), 'துட்டு வந்து பெட்டியில் விழுந் ததோ திட்டு வந்து பெட்டியில் விழுந்ததோ,' சம்பந்தரும் திருவீழிமிழலைப் பெருமானை 'வாசி தீரவே காசு நல்குவீர்' என வேண்டுகிறார். கனக சுப்புரத்தினமும் 'ஆயிரம் ஆயிரம் அம்பொற்காசுகள்' என்றார்.

**பணம் என்றால் என்ன ?**

இன்பமும், அறமும், புகழும், நினைத்தது முடித்தலும் யாருக்கு உண்டு? திரளாகப் பணம் படைத்தவர்களுக்கே உண்டு. பணம் இருந்தால் எதையுஞ் சாதிக்கலாம். அப் பெற்றித்தான பணத்தைப் பற்றி நாம் அறிந்துகொள்ள வேண்டாமா ?

பணம் என்றால் என்ன? இவ் வினவிற்கு விடை யிறுப்பது சிறிது கடினம். மின்சாரத்தைப் பயன்படுத்தும் எல்லோரும் மின்சாரத்தைப்பற்றி அறியமாட்டார்கள். அதேபோல் பணத்தைப் பயன்படுத்தும் எல்லோரும் பணத்தைப் பற்றி அறியமாட்டார்கள். மின்சாரத்தைப் பற்றி அறிந்தவர் சிலரே போல் பணத்தைப்பற்றி அறிந்த வரும் சிலரே. பலரால் பயன்படுத்தப்பட்டுப், பலராலும் பரிவர்த்தனைக் கருவியாக ஏற்றுக்கொள்ளப்படுவது பணம் எனலாம்.

**பணத்தின் தோற்றம்**

பண்டைய காலத்தில், மன்பதை, பல நாடோடி இனங்களாகப் பிரிந்திருந்தது. ஒவ்வொரு இனமும் தன் தேவைக்கு வேண்டிய உணவையும், உடையையும் தயாரித் துக்கொண்டது. நிலையான உடைமை (fixed property) அப்பொழுதில்லையாதலால், தனிப்பட்டவர்களுக்குள்ளோ,

இனங்களுக்குள்ளோ பரிவர்த்தனை செய்யக்கூடிய பொருள் அஞ்ஞான்று ஒன்றுமில்லை.

இனங்கள் ஒரே விடத்தில் நிலையாக உறையத் தொடங்கியதும், இந்நாடோடி வாழ்க்கை நின்றது. நிலையியற்பொருளிலும் (immovable property) உடைமை உரிமை ஏற்பட்டது. முன்னர்க் குகைகளில் வசித்த மனிதன் இப்பொழுது மரத்தின் கிளையினின்றோ, மாவின் தோலினின்றோ தன்உறையுளை அமைத்துக்கொண்டான். கல் அல்லது மரத்திலிருந்து கருவிகளையும், என்பிலிருந்து தூண்டில்களையும் தயாரித்துக்கொண்டான். முன்னர் வனவிலங்குகளைத் தன் திறமையால் வேட்டையாடி உணவைத் தேடிக்கொண்ட மனிதன் இப்பொழுது ஆடுமாடுகளைப் பழக்கி வளர்க்கக் கற்றுக்கொண்டான். இவற்றைப் பிற இனங்களிலிருந்தும், வன விலங்குகளிலிருந்தும் காப்பாற்ற பட்டி அமைத்துக்கொண்டான். இங்ஙனமாக, வருந்துதற்குரிய பொருளாயினும் அல்லவாயினும், தனி உடைமை அல்லது இன (tribal) உடைமை ஏற்பட்டது.

**பண்ட மாற்று**

சட்டமும் அமைதியும் நிலைநாட்டப்பட்டதும், கள்ளத்தால் அல்லது கட்டாயத்தால், பிறர் பொருளைக் கவர்வது லாபகரமாயில்லை என்பதை மனிதன் உணர்ந்தான். இங்ஙனம் உணர்ந்த பின்னரே பண்டமாற்றுப் பிறந்தது. அண்டை அயலாரிடமிருந்து, யாதாயினும் ஒரு பொருளைக் கொள்ள விரும்பினல் அவரை அணுகி, தன் விருப்பத்தைச்சுற்றி வளைத்துச் சொல்லி, அவருக்கு வேண்டுவதென்ன என்பதையும், அவர் வேண்டுவது தன்னிடம் உள்ளதாயின், எவ்வளவு அதில் பரிவர்த்தனையாகப் பெற்றுக்கொள்ள இசைவார் என்பதையும், அறிய முற்பட்டான். பல சமயங்களில், தன் நண்பன், அவனிடமுள்ள

பொருளைத்தர இணங்கினாலும், அவன் தன்னிடமுள்ள பொருளைக்கொள்ள இணங்கவில்லை என்பதையும், அங்ஙனம் இணங்கினாலும், தனக்கு வேண்டிய அளவுமட்டும் பொருளை வாங்குவதில் முட்டுப்பாடு இருப்பதையும் உணர்ந்தான்.

பணமில் பொருளியலின் (moneyless economy) அல்லது பண்டமாற்றின் (barter) சங்கடங்களை நாம் எண்ணும்பொழுது, பரிவர்த்தனைக் கருவியாகப் பணம் பயன்படுவதின் முக்கியத்துவம் புலப்படும். ஒரு பொருளுக்குப் பிரதியாக மற்றொரு பொருளைக் கொள்வது பண்டமாற்று எனப்படும். 'கங்கை நதிப்புறத்துக் கோதுமைப் பண்டம் காவிரி வெற்றிலைக்கு மாறுகொள்ளுவோம்' என்று பாரதியாரும் பாடினார். இக்காலத்தில், பண்டமாற்று அருகி வழங்குகிறது. நெல்லுக்குப் பிரதியாகக் கருவேப்பிலையை அல்லது கீரையைக் கொள்வது இன்னும் இருக்கிறது. ஆனால் இங்ஙனம் பரிவர்த்தனைக்கு வரும் ஒவ்வொரு ஜதைப் பொருள்களிடையேயும் நேரான மதிப்பு விகிதத்தை (direct value ratio) நிறுவுவதில் சங்கடம் இருக்கிறது. பத்துவித சாமான்களை ஒன்றுக்கொன்று பரிமாற வேண்டுமென்றால், 45 விகிதங்கள் (ratios) வேண்டப்படுகின்றன. எடுத்துக்காட்டாக 'அ'வின் மதிப்பை 'ஆ'விலும், 'இ'யிலும், 'ஆ'வின் மதிப்பை 'இ'யிலும், 'ஈ'யிலும் கூறவேண்டும், ஆனால் பணப்பொருளியலில் (money economy) எல்லாவித சாமான்களும் பணத்தில் குறிக்கப்பெறுகின்றன. பண்டமாற்றில் பத்துவித சாமான்களைப் பரிவர்த்தனை செய்ய 45 § விகிதங்கள் வேண்டியதாயிருக்க, அவை பணத்தில் குறிக்கப்பெறும்பொழுது பத்து

§

| | | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|
| அ ஆ | ஆ இ | இ ஈ | ஈ உ | உ ஊ | ஊ எ | எ ஏ | ஏ ஐ | ஐ ஒ |
| அ இ | ஆ ஈ | இ உ | ஈ ஊ | உ எ | ஊ ஏ | எ ஐ | ஏ ஒ | 1 |
| அ ஈ | ஆ உ | இ ஊ | ஈ எ | உ ஏ | ஊ ஐ | எ ஒ | 2 | |
| அ உ | ஆ ஊ | இ எ | ஈ ஏ | உ ஐ | ஊ ஒ | 3 | | |
| அ ஊ | ஆ எ | இ ஏ | ஈ ஐ | உ ஒ | 4 | | | |
| அ எ | ஆ ஏ | இ ஐ | ஈ ஒ | 5 | | | | |
| அ ஏ | ஆ ஐ | இ ஒ | 6 | | | | | |
| அ ஐ | ஆ ஒ | 7 | | | | | | |
| அ ஒ | 8 | | | | | | | |
| 9 | | | | | | | | |

மொத்தம் 45

விலைகள்தான் வேண்டியதாயிருக்கின்றன. ஏனெனில், ஒவ்வொரு விலையும், ஒரு சாமானின் மதிப்பைப், பிற சாமான்களின் மதிப்புடன் ஒப்பிடுவதற்குத் துணை செய்கிறது. இங்ஙனம் பணம் நேரத்தையும் சங்கடத்தையும் குறைக்கிறது.

பண்டமாற்றுக்கு வரும் சாமான்கள் பிரிக்கப்பட முடியாததாய் இருக்கலாம். அதுவுமின்றி ஒருவருக்கு வேண்டும் பொருள் மற்றவருக்கு வேண்டாததாய் இருக்கலாம். எடுத்துக்காட்டாக அரிசி வைத்திருக்கும் ஒருவருக்கு ஆடு வேண்டும் என்றால், ஆடு வைத்திருப்பவரைக் கண்டு பிடித்தால் மட்டும் போதாது. அவரும் அரிசியை விரும்ப வேண்டும். மேலும் ஒருவரிடம் அதிக மதிப்புள்ள சாமான் இருந்தால் அதற்குப் பிரதியாகக் குறைந்த மதிப்புள்ள சாமானைப் பெறுதல் முடியாது. எடுத்துக்காட்டாகப் பசு வைத்திருக்கும் ஒருவருக்குப் பலாப்பழம் வேண்டும் என்று வைத்துக்கொள்வோம். அவருக்கு இரண்டு பலாப்பழம் போதுமென்றால், அதற்குண்டான பசுவை, (அதாவது, பசுவைக் கூறிட்டுக்) கொடுக்கமுடியாது. இன்னும் பண்டமாற்றின் மூலம் சாமான்களின் மதிப்பை நிர்ணயிப்பதும் கடினம். எடுத்துக்காட்டாகப் பத்துக் கலம் நெல்லுக்கு ஒரு பசு என்றால், ஒரு புலித்தோலுக்கு எவ்வளவு நெல்? ஒரு பசுவுக்கு எத்தனை பன்றிகள்? ஒரு வெள்ளாட்டுக்கு எத்தனை வாழைப்பழம்? எல்லாவற்றுக்கும் மேலாக, பண்டமாற்றில் பேரம் செய்வது கடினமாயிருக்கலாம். உதாரணமாக, அரிசி வைத்திருப்பவர் ஒரு படியரிசிக்கு ஈடாகப் பத்து அன்னாசிப் பழத்தையும், பழம் வைத்திருப்பவர் நாலு பழத்திற்கு ஈடாக ஒரு படியரிசியையும் சமமாகக் கருதலாம். அந்நிலையில் பண்டமாற்று சாத்தியமில்லை.

சிக்கலில்லாத பண்டையநாளில் தான் பண்டமாற்று

சாத்தியம். எடுத்துக்காட்டாக, ஒரு விவசாய இனம் தன்னிடமுள்ள உபரி நெல்லைக்கொடுத்து, அதற்கு மாருக ஒரு நாடோடி இனத்திலிருந்து உபரி ஆட்டைக் கொள்ளலாம். அதேபோன்று இரு போர்வீரர்கள் முறையே வில்லையும் வாளியையும் செய்து அவற்றைத் தம்முள் சமமாகப் பிரித்துக்கொள்ளலாம். ஆனல் உழைப்பின் பாகுபாடு (division of labour) வளர வளர, பணம் பரிவர்த்தனைக்கு இன்றியமையாததாயிற்று. ஏனெனில், ஒரு பொருளைப் பலர் சேர்ந்து செய்வதால், ஒவ்வொருவர் செய்தது இவ்வளவு என்று அறுதியிட்டுக் கூறுவது முடியாததாயிற்று.

## பொது வாங்கும் சக்தி

பணம் பரிவர்த்தனைக் கருவியாகப் பயன்படும்பொழுது, ஒரே பரிவர்த்தனையில் சாமான்களுக்குச் சாமான்களைக் கொள்ளும் பண்டமாற்று, இரண்டு பரிவர்த்தனைகள் ஆகின்றது. முதலில் பணத்திற்குச் சாமான்கள் கொடுக்கப்படுகின்றன; மீண்டும் பணத்திற்குச் சாமான்கள் கொள்ளப்படுகின்றன. வாங்குவதும் விற்பதும் ஒன்றேயாதலாலும், இரண்டும் ஒரேசமயத்தில் நடைபெறுவதாலும், பண்டமாற்றுப் பொருளியலில் வாங்குவதும் இல்லை; விற்பதும் இல்லை. ஆனல் பணப் பொருளியலில் சாமான்கள் வாங்கவும் விற்கவும் படுகின்றன. பணப்பொருளியலில் மக்கள் எல்லோரும் தங்கள் வணிகத்தைப் 'பணம்' என்ற தரகர் மூலம் நடத்துகின்றனர். தற்பொழுது பணத்தைக் கொண்டு, விரும்பும் எந்தப் பொருளையும் வாங்குவது எளிது. பணம் படைத்திருப்பவன் அதை இப்பொழுதே செலவழிக்கலாம்; அல்லது சேமித்து வைக்கலாம். பணத்தைப் பெறுவது, ஒரு மந்திரக்கோலைப் பெறுவது போன்றது. ஒரு மந்திரவாதி

மந்திரக்கோலின் மூலம் விரும்பிய பொருள்களை வருவிப்பதுபோலப் பணம் படைத்திருப்பவனும் பணத்தின்மூலம் விரும்பிய பொருள்களைத் தருவித்துக்கொள்ளலாம். ஒருவருக்குப் பரிசாக ஒரு பொருளை அளிப்பதைவிடப் பணமாக அளிப்பது நல்லது. ஏனெனில், பரிசு பெறுபவருக்குப் பரிசுப்பொருள் பிடிக்காமல் இருக்கலாம். ஆனால் பணமாகப் பரிசைக் கொடுத்தால், அவர் தனக்குப் பிடித்தமான பொருள்களை வாங்கிக்கொள்ளலாம்.

**மதிப்பின் மாத்திரைக்கோல்**

மதிப்பின் மாத்திரைக்கோலான பணத்தைப் பிற அளவைகளுடன் ஒப்பிடலாம். திரவங்களை அளப்பதற்குக் காலனை (gallon)யும், தூரத்தை அளப்பதற்கு மைலை (mile)யும், பாரத்தை (weight) அளப்பதற்கு வீசையையும், தட்ப வெப்பத்தை அளப்பதற்கு டிகிரி (degree)யையும் உபயோகிப்பது போல மதிப்பை (value) அளப்பதற்குப் பணத்தை உபயோகிக்கிறோம். பொருளியல் மதிப்புகள் (economic values) பணத்தில் குறிப்பிடப்படும் பொழுது, 'விலைகள்' எனப்படும். ஒரு மரக்கால் நெல்லின் விலை ஒரு ரூபாய் என்று கூறுகிறோமே தவிர, அது இரண்டு வீசை வெண்ணெய்க்கும், பத்து முட்டைக்கும், ஒரு சட்டைக்கும், இருபது மைல் ரயிலில் பிரயாணம் செய்யும் உரிமைக்கும் சமம் என்று கூறுவதில்லை.

**ஒரு குறைபாடு**

பிற அளவைகளைப் போலன்றி, மதிப்பின் மாத்திரைக் கோலான பணத்தில், ஒரு குறைபாடு உள்ளது. ஒரு ஏக்கர் நிலத்தின் பரப்பு தஞ்சாவூரிலும் ஒன்றுதான், கலிபோர்னியாவிலும் ஒன்றுதான். ஒரு காலன் பெட்ரோலின் அளவு புதுச்சேரி, புடாபெஸ்டு, லண்டன், லிஸ்பன் எங்கும் ஒன்றே. ஆனால் பணம் அப்படிப்பட்டதல்ல. ஒரு கஜக்கோலைப்போல எல்லா சாமான்களின்

மதிப்பையும் அளப்பதற்குப் பணம் பயன்படுகிறதாயினும், காலத்துக்கேற்ப இக் கஜக்கோலின் நீளம் மாறுபடுகிறது. அதாவது பண கஜக்கோல் ஒரு காலத்தில் 36 அங்குலமும், வேறொரு காலத்தில் 32 அங்குலமும், பிறிதொரு காலத்தில் 45 அங்குலமும் உள்ளதாயிருக்கிறது. பணத்தின் மதிப்பு நிலையாயிராது, கூடியும் குறைந்தும் வருகிறது. இதையே வேறுவகையாகச் சொன்னால், விலைவாசிகள் நிலையாயிராது, ஏறியும் இறங்கியும் வருகின்றன எனலாம். பணக் கஜக்கோலின் நீளத்தில் மாறுதல்கள், விலைவாசிகளின் மாறுதல்களில் தெரியக்கிடக்கின்றன. பணம் பூரணமாக மதிப்பின் மாத்திரைக்கோலாகப் பயன்படாததற்குக் காரணம், அது பரிவர்த்தனைக் கருவியாகவும் பயன்படுவதுதான்.

### பணத்தின் துணை அலுவல்கள்

பரிவர்த்தனைகளை (transactions) இலகுவில் செய்யப் பெரிதும் துணைபுரிவது பணமே. எடுத்துக்காட்டாக ஒருவன் வீடு கட்டுகிறான் என்று வைத்துக் கொள்வோம். ஒரு வீடு கட்டி முடியுமட்டும் காத்திராது, மறுவீட்டைக் கட்டுவதற்கு முன்னதாகவே செங்கல்லை வாங்க நினைக்கலாம். அல்லது தற்பொழுது கட்டும் வீட்டை ஒரு குறிப்பிட்ட தொகைக்குக் கொடுப்பதாக இசைந்திருக்கலாம். இத் தொகையை, வீட்டைக் கட்டிக்கொடுத்த பின்பே பெற முடியும். ஆகவே அவன், பின்னர்ப் பணம் தருவதாகக் கூறி, செங்கல்லுக்கு முன்னதாகவே ஆர்டர் (order) கொடுக்கிறான். இங்ஙனமாகப் பணத்தில் பேரம் செய்வது எளிது. பணம் இல்லாவிடில் அவன் என்ன செய்வான்? சாமானை எதிர்காலத்தில் தருவதாக அவன் பேரம் செய்ய வேண்டும். ஆனால் அவ்வாறு பேரம் செய்வது எளிதாயிராது. ஏனெனில், இடைப்பட்ட காலத்தில் சாமானின் மதிப்புப் பெருத்தவளவில் மாறலாம். இவ்வாறு

காலங்கழித்துக் கொடுக்கப்படும் தொகைகளா (deferred payments)கப் பணம் பல்லாயிர வழிகளில் பயன் படுகிறது.

பண்டமாற்றில் வாங்குவதும் விற்பதும் ஏககாலத்தில் நிகழ்கின்றபடியால், வாங்குவதற்கும் விற்பதற்கும் இடையே நேரம் கழிவதில்லை. ஆனால் பணத்தின் விஷயம் வேறானது. ஏனெனில், ஒரு பொருளை விற்றதன் மூலம் கிடைத்த பணத்தை உடனே செலவழித்தாலும் செல வழிக்கலாம்; அல்லது செலவழிக்காது சேமித்தும் வைக்க லாம். இங்ஙனம் சிறுவாடு (savings) சேர்த்துப், பல திங்கள் அல்லது பல ஆண்டு செலவழிக்காது வைத்திருக் கலாம். இதைத்தான் நாம் சேமிப்பு (saving or hoarding) என்கிறோம்.

பணம் மதிப்பின் சேர் (store of value) ஆகவும் பயன்படுகிறது. உலகில் உள்ள எல்லாப் பொருள்களையும் அப்படியே சேர்த்து வைக்கலாமாயினும், பணமாகச் சேர்த்துவைப்பதே சிறந்தது. ஏனெனில், மற்றைப் பொருள்கள் விரைவில் அழியும். உதாரணமாக, உண வுப் பொருளை நெடுநாளைக்குச் சேமித்துவைக்க வேண்டு மாயின் அதற்கு அதிகச் செலவு பிடிக்கும். சேமித்து வைப்பதில் பெரும் பகுதியும் எதிர்காலத்தில் எதிர்பாராத செலவினங்களுக்காக விருப்பதே. சேமிப்புக்குப் பணம் சிறந்த கருவியாக இருப்பதன் காரணம்: சேமிப்பின் நோக்கம் பத்திரம் (security). நமக்கு எதிர்காலத்தில் என்ன வருமோ என்ன நேரிடுமோ என்பது தெரியாது. எதிர்காலத்தில் 'எதிர்பாராதது நடக்கலாம்' என்ற அச்சம் நமக்கு இருந்தபோதிலும், எந்தெந்த சாமான்கள் வேண்டியிருக்கும் என்று தெரியாது. ஆனால் பணத்தைச் சேமித்து வைத்தால் அதை நாம் விரும்பும் எந்தப் பொரு ளாகவும் மாற்றலாம். ஆகவே பணம் நல்ல மதிப்பின் சேராகவும் விளங்குகிறது.

தற்காலத்தில் அதிகமாகச் சேமித்துவைக்க விரும்பு கிறவர்கள், தங்கள் சிறுவாடுகளைக் கடன் பத்திரங்களி லும் (securities), பங்குகளிலும் போடுகின்றனர். ஆனால் இவைகளை வாங்குவதற்குப் பணம் வேண்டும். ஆகவே பணமின்றிப் பங்குகளை வாங்க முடியாதென்பதும், பணம் முன்னரும் பங்குகள் பின்னரும் தோன்றிய தென்பதும் பெறப்படும். பண்டமாற்று வழக்கிலிருந்தால் பெருவாரி யான முதலீடு (large scale investment) சாத்தியமில்லை. இங்ஙனமாக, மதிப்பைச் சேர்த்துவைக்கும் ஆசை, பணத் தால், நேர்முகமாகவோ மறைமுகமாகவோ நிறைவேறு கிறது.

பணம் இன்றி ஒரு இனம் சாமான்களைச் சிறிதுகாலத் திற்குச் சேர்த்துவைக்கலாமாயினும், அவை 'உதவாக் கரை சேமிப்பு'களா (sterile hoarding)கவே இருக்கும். காரணம் அவைகளினின்று யாதொரு வரும்படியும் இல்லாததே. ஆனால் பணத்தைச் சேர்த்துவைத்தால் வட்டி கிடைக்கிறது. சாமான்களைச் சேர்த்துவைத்தால் அவை 'சும்மா தூங்கும்.' அதுவுமின்றி இம்முறை இவ் வேழை உலகுக்குக் கட்டாது. இதுகாறும் கூறியவற்றான், நிகழ்காலத்தையும் எதிர்காலத்தையும் பிணிக்கும் சங்கிலி பணம் என்பது பெறப்படும். ஆயினும் கீன்ஸ் பிரபு (Lord Keynes) கூறியாங்கு எந்த உறுதியான ஆஸ்திக்கும் (durable asset) இந்தப் பண்பு உண்டு.

## திரவ ஆஸ்தி (Liquid Asset)

பணத்தைக்கொண்டு எப்பொருளையும் பெறக்கூடு மாதலால், தனிப்பட்ட மனிதரும், கம்பெனிகளும் ஓரளவு பணத்தைக் கையிருப்பில் வைத்துக்கொள்ள விரும்பு கின்றன. காரணம் எதிர்காலத்தில் எவ்வளவு வரும், எவ்வளவு போகும் என்று திட்டமாக ஒருவருக்கும் தெரியாததே. அவ்வாறு தெரிந்தால் வரவினத்தையும்

செலவினத்தையும் சரிக்கட்டலாம்; பணத்தைச் சேர்த்து வைக்கவேண்டிய அவசியமும் இல்லாமற்போகும்.

பங்குகள் வாங்காமல் பணமாகச் சேர்த்து வைப்பதற்கு இன்னொரு காரணம், பங்குகள் விலை தாழலாம் என்பது. பங்குகளைத் தவிர, இதர ஆஸ்திகளையும் நாம் சில சமயங்களில் உடனடியாக விற்கக்கூடுமாயினும், அவைகளைக் குறைந்த விலைக்கே விற்கக்கூடும். எவ்வளவு விரைவாக ஒரு உடைமையை அதன் தற்போதைய பெறுமானத்துக்குக் குறையாமல் விற்கலாமோ அது அதிக திரவ (more liquid) உடைமை எனப்படும். அங்ஙனம் நோக்கும் பொழுது, பணம் ஒன்றே மிகச் சிறந்த திரவப்பொருள் என்பது விளங்கும்.

### பணத்தின் வரன்முறை

**அலோகப் பொருள்கள் (Non-metallic Commodities):** மன்பதை பல பொருள்களையும் பணமாகப் பயன்படுத்தியிருக்கிறது என்பதை வரலாற்றிலிருந்து அறியலாம். அடிமை, அணில் தோல், அமேஸான் கல், அரிசி, ஆட்டுக்குட்டி, ஆட்டு ரோமம், இறகு, உடும்புத்தலை, உப்பு, எருது, எருமை, எலி, ஒட்டகம், ஒருவகை மான் (reindeer) தோல், கசக்கும் வாதாம் பருப்பு, கம்பளம், கருங்கல், களிமண், கன்றுக்குட்டி, காப்பிக்கொட்டை, காலிகோ (calico), கால்நடை, குதிரை, கோகோ கொட்டை, கோதுமை, சக்கரம், சந்தனமரம், சிகரெட், சுறுவின் பல், சூதாடு பலகை, செம்மறியாடு, டமாரம், தானியம், திமிங்கலத்தின் பல், தேங்காய், தேயிலை, தேன்மெழுகு, நாய்ப்பல், நெல், பட்டு, பருத்தி, பலரகக் கிளிஞ்சல், பறக்கும் நரியின் உரோமம், பனி நத்தை ஓடு, பன்றி, பன்றி மருப்பு, பாய், பார்லி, பீங்கான், புகையிலை, புலிநகம், புளியங்கொட்டை, பூனைக்கண், பெண், பேரீச்சம்பழம், மக்காச்சோளம், மஞ்சள், மணி,

மண்டையோடு, மரம், மரவுரி, மாடு, மிளகு, மீன் தூண்டில், மீன் முள், முட்டை, யானை, யானை மருப்பு, லினன் (linen) துணி, வீஸல் (weasel) தோல், வெண்ணெய், வெள்ளாடு, வைக்கோல், ஜின் என்னும் ஒரு வகைச் சாராயம், ஜீனி, இவையெல்லாம் பணமாக முற்காலத்தில் வழங்கின.

இவற்றில் தானியமும், ஆடு மாடுமே (பணமாக) அதிகமாகப் பயன்பட்டன. பெகுஸ் (pecus) என்ற லத்தீன் வார்த்தைக்கும், பெய்கு (faihu) என்ற ஜெர்மன் வார்த்தைக்கும், ரூபா (rupa) என்ற வடமொழி வார்த்தைக்கும், மாடு என்றே பொருள். ரூபா என்ற சொல்லே திரிந்து ரூபாய் என தமிழில் வழங்குகிறது. ரூபா என்ற வடசொல்லுக்கு நேரான தமிழ்ச் சொல்லாகத் தமிழில் மாடு என்ற சொல் வழங்கப்பெறுகிறது.

> "கேடில் விழுச்செல்வம் கல்வி ஒருவற்கு
> மாடல்ல மற்றை யவை" [திருக்குறள், கல்வி.]

என்ற வள்ளுவர் வாக்கையும்,

> மாடுஞ் சுற்றமும் மற்றுள போகமும்
> மங்கையர் தம்மோடும்
> கூடி யங்குள குணங்களா லேறுண்டு
> குலாவியே திரிவேனை
> வீடு தந்தென்றன் வெந்தொழில் வீட்டிட
> மென்மலர்க் கழல்காட்டி
> ஆடு வித்தென தகம்புகுந் தாண்டதோர்
> அற்புதம் அறியேனே. [திருவாசகம், அற்புதப் பத்து.]

என்ற மாணிக்கவாசகர் வாக்கையும் நோக்குக.

## உலோகப் பணம் (Metallic Money)

பயனுள்ள உபகரணங்களே பழைய நாகரிகங்களின் உலோகப் பணமாக இருந்தன. (உ—ம்.) கத்தி, கம்பி, கோடரி, கோப்பை, பாளம் (வெள்ளி, பொன்னுலாயது.)

பாணை, மீன்முள். இவை இரும்பு, தாமிரம், வெண்கலம் முதலான உலோகங்களில் செய்யப்பட்டன. காலம் செல்லச் செல்ல, முன்பு நடப்பு வாழ்க்கையில் இருந்த சாமான்களின் பிரதிநிதியாகப் பணம் ஆயிற்று.

உலோகங்கள் பின்கண்ட வரிசையில் கண்டுபிடிக்கப்பட்டதாக நம்பப்படுகிறது. பொன், தாமிரம், வெள்ளி, இரும்பு, இவை முதலிலும் பின்னர்ப் பிற உலோகங்களும் கண்டுபிடிக்கப்பட்டன.

இந்தியாவில் ரிக்வேத காலத்திலேயே (சுமார் கி. மு. 2000) பொற்கட்டி, பணமாக உபயோகிக்கப்பட்டதாக அறிகிறோம். அது **இரணியப் பிண்டம்** என்றழைக்கப்பட்டது. தமிழில் அதன் நேர் பொருள் பொற்கட்டி. கந்த புராண ஆசிரியர் கச்சியப்ப சிவாசாரியார் இரணியனைப் 'பொன்னன்' என்றே கூறுவர். 'ஆடகப் பெயரின் அவுணர் மார்பினன்' என வரூஉம் குமரகுருபரர் வாக்கும் (திருவாரூர் நான்மணிமாலை) ஈண்டு நினைவு கூறற்பாலது.

**நாணயம்**

முதலில் உலோகங்கள் நிறுக்கப்பட்டுப் பாளங்களாகவே (ingots) பயன்படுத்தப்பட்டன. ஒவ்வொரு முறையும் இப்பாளங்களை எடை போடவேண்டியிருந்ததால், இம்முறையில் இடைஞ்சல் மிக இருந்தது. நாணய வரவால் இவ்விடைஞ்சல் நீங்கியது. முத்திரையிடப்பட்ட உலோகத் துண்டுகளையே நாணயங்கள் என்கிறோம். இக்காலத்தில் நாணயங்களை அச்சிடும் ஏகபோக உரிமை அரசாங்கத்தாருக்கே இருக்கிறது. அவ்வாறு அரசினர் அச்சிடுவதால் 'எல்லாம் ஒரே அச்சா'யிருக்கிறது. கள்ள நாணயங்கள் அச்சிடுவோரைக் குற்றவாளிகளாகக் கருதி அரசாங்கம் ஒறுக்கிறது.

இப்பொழுது கள்ள நாணயங்களை இலேசில் கண்டுபிடித்துவிடலாம். அரசாங்கத்தார், தாம் வெளியிடும்

நாணயங்களைப் பிறர் இலேசில் காப்பியடிக்க முடியாத வாறு, அச்சடிக்கின்றனர். அரசாங்கத்தார் வெளியிடும் நாணயங்களை இலகுவில் வெட்டவும் முடியாது; தறிக்க வும் முடியாது. அவர்கள் வெளியிடும் நாணயங்களின் விளிம்புகளில் பள்ளங்களும், எழுத்துக்களும் பொறிக்கப் படுகின்றன. நாணயங்கள் வட்டவடிவமான தட்டை உலோகத்துண்டுகளாகவும், வழுவழுப்பான விளிம்பு களோடு கூடியும் மட்டும் இருந்தால், சுலபமாக அவற்றின் மேற்புறத்தைச் சுரண்டலாம்; வெட்டலாம். நாணயக் கலை பரிபூரணம் அடையாது இருந்த முற்காலத்தில், நாண யங்களைத் துண்டிப்பது (sweating) சர்வ சாதாரணமா யிருந்தது.

தற்பொழுது நாணயங்கள் செலாவணியில் சிறு அங்கமே வகிக்கின்றன. (உ—ம்.) அமெரிக்க ஐக்கிய நாடுகளில், நாணயங்கள், மொத்த செலாவணியில் 2 சத விகிதத்திற்கும் குறைவாகவே யிருக்கின்றன. தற்காலத் தில் நாணயங்கள் சில்லறை வியாபாரங்களிலேயே பெரிதும் பயன்படுகின்றன.

நாணயத்திற்கு, வெவ்வேறுபட்ட தனித்தனி, மூன்று வரலாறுகள் உண்டு. கி. மு. பதினேரும் நூற்றுண்டில் சீனவிலும், கி. மு. ஏழாம் நூற்றுண்டின் தொடக்கத்தில் சிற்றுசியா (Asia Minor)விலுள்ள லிடியா (Lydia)விலும், கி. மு. நான்காம் நூற்றுண்டில் இந்தியாவிலும், முதன் முதல் நாணயங்கள் அச்சிடப்பட்டன.

**காகிதப் பணம் (Paper Money)**

தற்காலத்தில் மிகுதியாகப் பயன்படுவது காகிதப் பணமே. முதன் முதல் கி. மு. 177–ல் சீனவில் காகிதம் கண்டு பிடிக்கப்பட்டது. கி. பி. ஒன்பதாம் நூற்றுண்டின் முற்பகுதியில், ஹீன்ஸாங் (Hsien-tsung) ஆட்சியில்

காகிதப் பணம் அச்சிடப்பட்டது. அதுமுதல், விட்டு விட்டு, பதினேழாம் நூற்றுண்டின் இடைப்பகுதிவரை, சீனச் சக்கரவர்த்திகளாலும், அதன்பின் செங்கிஸ்கான் வெற்றியையடுத்து மங்கோலியர்களாலும், காகிதப் பணம் பெருவாரியாக அச்சிடப்பட்டு வழங்கப்பட்டது.

## பாங்குப் பணம் (Bank Money)

பாங்கு டிபாசிட்டுகளைப் (deposits) பணமாகக் கொள்ளலாம்; ஆனுல் செக்குகளை (cheques)ப் பணமாகக் கொள்ளமுடியாது. நோட்டுகள், நாணயங்கள், இவற்றைப்போல பாங்கு டிபாசிட்டுகளும் எத்தனையோ முறை கைமாறலாம். சாமான்கள் வாங்குவதற்கும், கடன்கள் தீர்ப்பதற்கும் பாங்கு டிபாசிட்டுகளை உபயோகிக்கலாம். பாங்கு நோட்டு (bank note) எனப்படுவது பாங்கின் உறுதிமொழிச் சீட்டே (promissory note). நோட்டுக்கும் டிபாசிட்டுக்கும் வேறுபாடு, முன்னையது தனிக் காகிதத்திலும், பின்னையது பாங்கின் புத்தகங்களிலும் எழுதப்பட்டிருப்பதே. பாங்கு டிபாசிட்டுகளைச் செக்கின் மூலம் எடுக்கலாம். தற்பொழுதும் பணமாகப் பெரிதும் பயன்பட்டுவருவது (முன்னேற்றமடைந்த நாடுகளில்) பாங்கு டிபாசிட்டுகளே.

---

**குறிப்பு:** ரிக்வேத காலத்திலேயே (சுமார் கி. மு. 2000) நாணயம் வழங்கியது என்று கூறுவாருமுளர். ஆனுல் **நிஷ்கா** (nishka) என்ற வட சொல்லுக்கு நாணயம் என்றும், உலோகக்கட்டி என்றும் வெவ்வேறு பொருள்கள் கூறப்படுகின்றன வாதலால், நாம் இதைப்பற்றி ஒன்றும் அறுதியிட்டுக் கூறவியலாது. வேத பிற்காலத்தில் **கிருஷ்ணுலா, சாதமாணு** என்று பெயரிட்ட நாணயங்கள் வழங்கின. ரிக்வேதத்தில் குறிப்பிடப்பட்ட இடங்கள் எல்லாம் பொன் அகப்படும் இடங்கள் என்பதும், ஸர் ஜான் மார்ஷல் கூற்றுப்படி, மொகஞ்சதாரோ புதை பொருள்களில் முட்டை வடிவமான செம்பு நாணயங்கள் இருந்தன வென்பதும், சென்னை மாநிலத்தில் உள்ள சிங்கவரத்தில் வெள்ளிக்கட்டிகளும், கண்டுகளும் (coils) அகப்பட்டன வென்பதும் ஈண்டுக் கருதற்பாற்று. பொதுவாகக் கூறுமிடத்து, இந்தியாவில் இந்து அரசர்கள் பொன் நாணயங்களையும், முஸ்லீம் அரசர்கள் வெள்ளி நாணயங்களையும் அச்சிட்டு வழங்கினர் எனலாம்,

### பணத்தின் பண்புகள்

எல்லோரும் ஏற்றுக்கொள்ளக் கூடியதாகவும், இலகுவில் எடுத்துச் செல்லக்கூடியதாகவும், போதுமான அளவு உற்பத்தி செய்யப்படக்கூடியதாகவும், நெடுநாள் நிற்கக்கூடியதாகவும், எளிதில் அறியக்கூடியதாகவும், எளிதில் பிரிக்கக்கூடியதாகவும், நிலைத்த மதிப்புடன் கூடியதாகவும், ஒரேமாதிரியாகவும் பணம் இருக்க வேண்டும்.

### சில விளக்கங்கள்

பல்வேறு காரணங்களை முன்னிட்டுப் பணத்தைக் குறிக்கப் பல சொற்கள் ஆளப்படுகின்றன. இச்சொற்களை நாம் எப்பொருளில் ஆள்கிறோம் என்று ஆராய்வது அவசியமாகிறது.

### க. சட்ட பூர்வமான பணம் (Legal Tender Money)

**சட்ட பூர்வமான பணம்** என்பதாலேயே கடன்காரர்கள் ஏற்றுக்கொள்ள வேண்டிய கட்டாயமில்லை. ஆனால் ஏற்க மறுத்தால் வட்டி கொடுக்க வேண்டியதில்லை. மேலும் பல முன்னேற்றமடைந்த நாடுகளில் வரம்புச் சட்டங்கள் (statutes of limitation) இயற்றப்பட்டுள்ளன. கடன் ஒப்பந்தத்திற்கு முரணின்றி, ஆறு அல்லது ஏழு ஆண்டுக்குள் கடனைத் திரும்ப ஏற்க மறுத்தால், அக் கடனைச் சட்டப் படித் திருப்பிக் கொடுக்க வேண்டியதில்லை. பல நாடுகள், ஒன்று அல்லது ஒன்றுக்கு மேற்பட்ட பண வடிவங்களை (forms of money) வரம்பில் சட்ட பூர்வமான பணமாக (unlimited legal tender) அறிவித்திருக்கின்றன. இந்தியாவில் வரம்பில் சட்டபூர்வமான பணம் ரூபாய். (ரூபாய் நோட்டும் ரூபாய் நாணயமும்). தற்பொழுது பல நாடுகளில் மத்திய பாங்கின் (central bank) நோட்டுகளே வரம்பின் சட்டபூர்வமான பணமாக செலாவணியாகின்றன.

உ. **செலாவணி** (currency) என்பது நோட்டுகளையும் நாணயங்களையும் சேர்த்துக் குறிப்பிடுகிறது. ரூபாய் போன்று ஒரு தனிப்பட்ட செலாவணி அலகைக் (currency unit) குறிப்பிடவும் அது உபயோகிக்கப்படுகிறது.

ங. **ரொக்கம்** (cash) என்பது நாணயத்தையும் நோட்டையும் சேர்த்துக் குறிக்கிறது.

ச. **முழு மதிப்புள்ள பணம்** (Full-bodied money): எந்தப் பணத்தின் மதிப்பும், அது எதனால் (காகிதத்தாலோ அல்லது உலோகத்தாலோ) ஆகியிருக்கிறதோ, அதன் மதிப்பைவிட அதிகமாயிராது. பணத்தின் மதிப்பும், அது எதனால் ஆகியிருக்கிறதோ அதன் மதிப்பும் சமமாக விருந்தால் அது முழு மதிப்புள்ள பணம் எனப்படும். (உ-ம்.) கி. பி. 1914க்கு முன் இங்கிலாந்தில் வழங்கிய பொன் சவரன்கள் (gold sovereigns), இந்தியாவில் சிறிது காலத்திற்குமுன் வழங்கிய விக்டோரியா மகாராணி ரூபாய்கள். தற்பொழுது வழங்கும் ரூபாய் நாணயங்களில் பதினாறணா பெறுமானமுள்ள வெள்ளியில்லாததால் அவை முழு மதிப்புள்ள பணம் இல்லையென்பது தெளிவு.

ரு. **அடையாளப் பணம்** (token money): பணத்தின் மதிப்பு, அது எதனால் செய்யப்பட்டிருக்கிறதோ அதன் மதிப்பைவிட அதிக மதிப்பு உடையதாயிருந்தால் அது **அடையாளப் பணம்** எனப்படும். காகிதப்பணமும், துணைப் (subsidiary) பணமும் இவ்வகையில் அடங்கும். ரூபாய் நோட்டின் மதிப்பு 16 அணா. ஆனால் அந்நோட்டு அச்சடிப்பதற்குக் காலணா செலவுகூட ஆகியிருக்காது. ஆகவே ரூபாய் நோட்டு அடையாளப் பணமாகும். அடையாள நாணயங்கள் குறிப்பிட்ட தொகைக்கே சட்ட பூர்வமான பணமாக (limited legal tender) வழங்குகின்றன. (உ-ம்.) தற்பொழுது இந்தியாவில் வழங்கும் ரூபாய் நாணயம்

அடையாள நாணயமாக இருந்தாலும் வரம்பில் சட்ட பூர்வமான பணமாகும். ஆனால் நிக்கல் (nickel) நாணயங்கள் ஒரு ரூபாய் வரைதான் சட்ட பூர்வமான பணம். அதாவது ஒருவன் ஒருவர்க்கு ஒன்றுக்கு மேற்பட்ட ரூபாயை நிக்கல் நாணயமாகக் கொடுத்தால் அவர் ஏற்க வேண்டிய அவசியமில்லை. ஆனால் விரும்பினால் எவ்வளவு வேண்டுமானாலும் ஏற்கலாம். இங்கிலாந்தில் வெள்ளி ஷில்லிங் நாணயம் நாற்பது ஷில்லிங் வரையிலும், தாமிர நாணயம் ஒரு ஷில்லிங் வரையிலும் சட்ட பூர்வமான பணம்.

**சு. துணைப் பணம்** (subsidiary money): சிறு தொகைகளுக்காக மட்டும் உபயோகிக்கும் பணம் துணைப்பணம் அல்லது ஓத்தாசைப்பணம் எனப்படும். (உ-ம்.) எட்டணா, நாலணா, இரண்டணா, அணா, காலணா, தம்பிடி நாணயங்கள். இவையெல்லாம் அடையாள நாணயங்கள்.

**எ. பிரதிநிதித்துவப் பணம்** (representative money): முழு மதிப்புள்ள நாணயங்களாக மாற்றக்கூடிய பணம் **பிரதிநிதித்துவப் பணம்** எனப்படும். இங்கிலாந்தில் 1914-க்கு முன் வழங்கிய நோட்டுகள் இவ்வகையைச் சேர்ந்தன. அவைகளைக் கொடுத்துப் பிரதியாக பொன் நாணயங்களைப் பெறலாம்.

**அ. கட்டளைப்பணம்** (fiat money): அரசாங்கத்தின் கட்டளையால் சட்ட பூர்வமான பணமாகச் செலாவணியாவது கட்டளைப்பணம் எனப்படும்.

**கூ. பாங்குப் பணம்** (bank money): பாங்குப் பணம் பாங்கு நோட்டுகளையும், பாங்கு டிபாசிட்டுகளையும் குறிக்கும்.

# இரண்டாம் அதிகாரம்

## பணமும் உற்பத்தியும்

பிரகாசிக்கும் பொற்காசுக் குவியல்களினூடே ஊடாடும் காலம் மலையேறிவிட்டதால், இப்பொழுது இவறுந் தன்மை மிகக் குறைந்துவிட்டது. இருந்தாலும் புது நோட்டுகள் மோகம் இன்னும் மக்களை விட்டபாடில்லை. ஆயினும் பாங்கின் பாஸ் புத்தகத்தில் (pass book) ஓர் எண் உருவத்தை பணம் அடையும்பொழுது அதன் வசீகரம் போய்விடுகிறது. இருந்தாலும் மக்கள் எல்லோரும் பணத்தை விரும்புகின்றனர். காரணம் வாழ வகை செய்வதற்குப் பணம் இன்றியமையாதது. சமூகத்திற்கும் பணம் இன்றியமையாதது. ஏனெனில், தற்போதுள்ள அமைப்பின்படிப் பணமின்றிப் பெருவாரியான உற்பத்தி சாத்தியமில்லை.

தற்பொழுது உலகில் உள்ள ஒவ்வொரு பொருளும் ஒரு தனிப்பட்டவருக்கோ அல்லது ஒரு குழுவுக்கோ உரிமையாயிருக்கிறது. ஆனால், காற்று எல்லோருக்கும் பொது. சில பகுதிகளில், இறந்த காலத்தின் நினைவுச் சின்னங்களாக பொது உரிமைகள் (common rights) இன்னும் நிலவுகின்றன. இவை தமிழ் நாட்டில் "ஊர்ப் பொது" என்று கூறப்பெறும். (உ-ம்.) சிற்றூர்களிலுள்ள குளங்கள், சாவடிகள், திடல்கள், பூங்கா முதலியன. ஆனால் "ஊர்ப் பொது"வாக உள்ள பொருள்கள் தற்பொழுது சிலவே. ஏனெனில், பல பொருள்கள் மக்கள் உடைமையாகிவிட்டன. சட்டப்படி அவைகளின் மீது அவர்களுக்குப் பாத்தியதை உண்டு. மக்களில் பெரும்பகுதியினர்—தங்கள் உழைப்பால் தங்கள் தேவைகளைப் பூர்த்தி செய்துகொள்ளும் சில குடியானவர்களைத் தவிர்த்து—

கைப்பாடுபட்டே சாப்பிடுகின்றனர். அவர்கள் தங்களிடம் உள்ளவற்றை பணத்தின்மூலம் அவற்றை வேண்டுபவர்க்குப் பரிவர்த்தனை செய்து உயிர் வாழ்கின்றனர். பணமெனும் தரகர் இன்றி தனி உடைமை முறை (system of private property) இயங்காது. தனி உடைமையில் ஏற்படும் தடங்கல்களை நிவர்த்திக்கும் கருவி பணம்.

தன் வளர்ச்சியில் சமூகம் பணத்தைப் படைத்தது மட்டுமின்றி, மக்களை இரு வகுப்புக்களாகவும் பிரித்தது. ஒரு வகுப்புக்குச் சொத்தில்லை, சுதந்திரமில்லை, வீடு இல்லை, வாசலில்லை, பணமில்லை; அல்லது தன் தேவைகளைப் பூர்த்தி செய்துகொள்ளும் அளவுக்குப் பணமில்லை. இன்னொரு வகுப்புக்குச் சொத்து இருக்கிறது. அதைப் பணத்தின் மூலம் பரிவர்த்தனை செய்து தன் தேவைகளைப் பூர்த்தி செய்துகொள்கிறது.

முந்திய வகுப்பின் பிரச்சினை பணத்தை எங்ஙனம் பெறுவதென்பது. அது தன் உழைப்பை விற்று, அதன் மூலம் வரும் கூலியைப் பெற்று, வாழ்க்கைத் தேவைகளைப் பெற முயல்கிறது. பிந்திய வகுப்பின் பிரச்சினை வேறுபட்டது. அதற்கு வேண்டும் சொத்து இருக்கிறது. அதைப் பணத்திற்கு விற்று வேண்டும் தேவைகளைப் பூர்த்திசெய்து கொள்ளலாம். அதன் பிரச்சினை உணவு, உறையுளை எங்ஙனம் பெறுவது என்பதல்ல. வளமாக வாழ்ந்துகொண்டு எங்ஙனம் செல்வத்தைப் பெருக்குவது என்பதே. பிந்திய வகுப்பினர் முந்திய வகுப்பினரை வேலை வாங்குகின்றனர்; வேலைக்குக் கூலியும் கொடுக்கின்றனர்.

எல்லா மக்களையும் இவ்விரு வகுப்புக்களுக்குள் அடக்க முடியாது. சிலர் ஒரு வகுப்பிலிருந்து இன்னொரு வகுப்புக்குச் செல்லலாம். பலர் 'இரண்டுங் கெட்டான்' அல்லது திரிசங்கு நிலையில் உள்ளனர். அவர்களுக்குச்

சிறிது சொத்து இருந்தாலும், அதிலிருந்து வரும் ஊதியம் போதாமையால், பிறருக்கு உழைக்கவேண்டிய நிர்ப்பந்தம் இருக்கிறது.

உழைப்பாளிக்குக் கூலியை வாங்குவதுடன், பண முறையில் உள்ள தொடர்பு நீங்கிவிடுகிறது. அவன் வாழ்க்கைத் தேவைகளைப் பூர்த்தி செய்துகொண்டு, வேலையில்லாமல் இருக்கும் காலத்திற்கும், நோயால் உழலும் காலத்திற்கும் உதவுமாறு, சிறிது சேமித்து வைக்கலாம். இருந்தாலும் அவன் தன் கைகொண்டு கரணம் போட்டே வாழவேண்டி யிருக்கிறது. ஆகவே அவனுக்குப் பணம் பரிவர்த்தனைக் கருவியாக மட்டும் பயன்படுகிறது.

திரளாகப் பணம் படைத்தவர்களின் தேவைகளைப் பூர்த்திசெய்து கொள்வதற்குத்தான் விரிவான நிதி முறையும் (financial system), பாங்குகளும், துடைப்பு வீடுகளும் (clearing houses), பணச்சந்தையும் (money market), பங்குப் பரிவர்த்தனையும் (stock exchange), அந்நியப் பரிவர்த்தனையும் (foreign exchange), கடன்களும், பிற உபகரணங்களும் ஏற்பட்டிருக்கின்றன. இம்முறையால் எல்லாப் பேரங்களும் (transactions) சாத்தியமாகின்றன. ஆனால் இதே முறையே பொருளியல் நெருக்கடிகள் (economic crises) ஏற்படும் காலத்து, உற்பத்தி நிறுத்தம் ஏற்படுதற்குக் காரணமாகவும் இருக்கிறது. அமித உற்பத்தி ஏற்படும்பொழுது உற்பத்திசெய்த பொருள்களை விற்க முடிவதில்லை; அல்லது நஷ்டத்திற்குத்தான் விற்க முடிகிறது. விலைவாசிகள் இறக்கத்தால் கடன்களைக் குறிப்பிட்ட கெடுக்களில் திருப்பித்தர முடிவதில்லை. இதனால் நிதி முறையே மெதுக்கனுகச் செல்கிறது; உற்பத்திக்கு வேண்டிய பணம் இல்லாததால் தொழிலாளிகள் வாளாவிருக்க நேரிடுகிறது. விலைவாசிகள் ஏற்றத்தால் உற்பத்தி துரித கதியில் செல்லும். உற்பத்தியில் அதிகமாகப் பணம்

போடப்படும். லாபவேட்டையைக் கருதி அதிகமான தொழிலாளிகள் வேலைக்கு எடுத்துக் கொள்ளப்படுவர்; உற்பத்திப் பொருள்களும் பல்கும். லாபவேட்டையே உற்பத்தியை இயக்கும் சக்தி. நஷ்டம் வருமென்றால் உற்பத்தி நிறுத்தப்படும். நஷ்டமும் லாபமும் விலைவாசிகளால் நிர்ணயிக்கப்படுகின்றன.

பண உற்பத்தியைக் (supply) கட்டுப்படுத்துவதன் மூலம் உற்பத்தியைக் கட்டுப்படுத்தித் தற்போதைய சமுதாய முறையில் மாறி மாறி வரும் செழிப்பு(boom)களையும், மந்தங்(slumps)களையும் தவிர்த்து, மிதமான உற்பத்திக்கு வழி கோலலாம் என்பது சிலரின் கருத்து. மேலெழுந்தவாரியாகப் பார்க்குமிடத்து இது உண்மையெனத் தோன்றுகிறது. ஏனெனில், அமித உற்பத்தியை வாங்குவதற்கு ஆட்கள் இருந்தால் விலைவாசி சரியாது; பொருளியல் நெருக்கடியும் ஏற்படாது. ஆனால் இதில் தவறு என்னவெனில், பணத்தை எவ்வர்க்கத்தினர்—முதலாளியினரா தொழிலாளியினரா—ஆட்சி செலுத்துகின்றனர் என்பதைப் புறக்கணிப்பதே.

எடுத்துக்காட்டாக விலைவாசிகள் இறக்கத்தால் உற்பத்தி மெதவலாக நடக்கும் நிலையை ஆராய்ந்தால், உற்பத்தி சுணக்கத்திற்குக் காரணம், உற்பத்தி செய்த பொருள்கள் விற்கமுடியாததோ அல்லது அங்ஙனம் விற்றாலும் லாபத்திற்கு விற்கமுடியாததோ தான் என்பது புலனாகும். பாங்குகள் அதிகக் கடன் கொடுப்பதால் முதலாளிகளின் சில சொந்தக் கஷ்டங்கள் தீரலாம். ஆனால் அவர்கள் எக்காரணத்தாலும் விற்கமுடியாத, அல்லது லாபத்திற்கு விற்க முடியாத சாமான்களை உற்பத்தி செய்யமாட்டார்கள். அங்ஙனம் உற்பத்தி செய்தால் பொருள்கள் உற்பத்தி முன்னிலும் அதிகமாகி இன்னும் 'நிலைமை மோசமாகும்.' விலைகள் இறங்கி

நஷ்டம் ஏற்படும்பொழுது யாரும் கடன் வாங்கி உற்பத்தியை அதிகரிக்க முன் வரமாட்டார்கள்.

ஒரே ஒரு நிபந்தனையின் பேரில் கடன் கொடுத்தால், அமிதமாக உற்பத்தி செய்யப்பட்ட பொருள்கள் விற்பனையாகும். அதாவது தொழிலாளர்களுக்குப் பாங்குகள் கடன் கொடுத்தால், அமித உற்பத்தி தேங்கிக்கிடக்காது. ஆனால் இம்முறை மூலம் சாமான்களை நீடித்த காலம் விற்கமுடியாது. ஏனெனில், கடனையும் வட்டியையும் தங்கள் கூலியிலிருந்தே தொழிலாளிகள் கொடுக்க வேண்டுமாதலால், அவர்கள் பொருள்களின்மீது செலவழிக்கும் தொகையின் அளவு குறையும். ஆகவே ஒரு காலத்தில் கிராக்கியை (demand) அதிகரிக்க முயற்சித்தால், பின்னர் கிராக்கி குறைந்து புது நெருக்கடி ஏற்பட ஏதுவாகும்.

ஆகவே அமித உற்பத்தி (over-production)யினால் ஏற்படும் நெருக்கடியை முதலாளிகளுக்கோ, தொழிலாளிகளுக்கோ பெருவாரியான கடன்களைக் கொடுப்பதன் மூலம் பாங்குகள் சமாளிக்க முடியாது. இம்முறையில் பணத்துடன் சிறிதும் தொடர்பில்லாத பல தடங்கல்கள் நேரலாம். தற்போதைய முறையில் உற்பத்தி, லாபத்தைப் பொறுத்தும், பெரும்பான்மை மக்களான தொழிலாளிகளின் வாங்கும் சக்தியைப் பொறுத்தும் இருக்கிறது. அதே அமயம் இவ்வாங்கும் சக்தி கூலியினால் கட்டுப்படுத்தப்படுகிறது.

உற்பத்திச் சுணக்கத்தைப் பாங்குகள் தவிர்க்க முடியாதென்பதை மேலே கண்டோம். அமித உற்பத்தியைப் பாங்குகள் தவிர்க்க முடியுமா என்பதை இனிக் காண்போம். உற்பத்தியைக் கட்டுப்படுத்த தொழிலதிபர்களால் ஒப்பந்தங்கள் செய்யப்படுகின்றன. ஆனால்

இவையெல்லாம் சில காலமே அமுலில் இருக்கின்றன. இவ்வொப்பந்தங்கள் உற்பத்தியைக் கட்டுப்படுத்துவதன் மூலம் பொருள் உபயோகத்தை (consumption) கட்டுப்படுத்துகின்றன. ஏனெனில், உற்பத்திக் குறைவதால் அதில் ஈடுபட்டிருக்கும் தொழிலாளிகளின் தொகை குறைய, அவர்களின் கூலி குறைந்து வாங்கும் சக்தி குறைகிறது. பல நாடுகளிடை ஏற்படும் கட்டுப்பாடு ஒப்பந்தங்கள் (restriction agreements) நீடித்து இருக்காததற்குக் காரணம், ஒரு நாடு தனக்கு ஒதுக்கப்பட்ட உற்பத்தியின் அளவில் (quota) அதிருப்தியடைந்து ஒப்பந்தத்தை மீறுவதே. புது உற்பத்தியாளர்களும் சதா தோன்றி இவ்வொப்பந்தத்தை மீறுகின்றனர்.

உற்பத்திக் கட்டுப்பாட்டுக்கான எந்தத் திட்டத்திலும் இக் கஷ்டங்கள் இருக்கின்றன. உற்பத்தியாளர்களிடை உடன்பாடின்றி, பாங்குகள் கடன் கொடுப்பதைக் கட்டுப்பாடு செய்வதன் மூலம், உற்பத்தியைக் கட்டுப்படுத்துவதில் இன்னும் அதிகமான கஷ்டங்கள் இருக்கின்றன. ஒரு நாட்டிலுள்ள பாங்குகள் மட்டுமன்றி, உலகிலுள்ள பாங்குகள் பூராவும் ஒத்துழைக்கவேண்டும். இங்ஙனம் பாங்குகள் ஒத்துழைக்க முன்வந்தாலும், அவற்றின் மூலம் தான் தொழில் அதிபர்கள் கடன் பெறவேண்டும் என்பதில்லை. ஒரு தொழிலில் அதிக லாபம் கிடைத்தால், வேறு புதிய எந்திரங்களை ஸ்தாபிக்காமல், அதிக நேரம் (overtime) உழைப்பதன் மூலம் உற்பத்தியைப் பெருக்க முடியும்.

இதனால், விலைகள் இறங்கும்பொழுது தாராளமாகக் கடன் கொடுத்தும், விலைகள் ஏறும்பொழுது கடன்களை மட்டுப்படுத்தியும், பாங்குகள் நடந்தால் அவைகளால் பயனில்லை என்பதல்ல. ஒரு வரம்புக்கு உட்பட்ட பயனே

ஏற்படுகிறது. அதாவது, செழிப்பையோ சுணக்கத்தையோ சிறிது காலந்தாழ்த்துவரச் செய்யமுடிகிறது.

அதேபோன்று அரசாங்கத்தின் மூலம் முதலாளிகளுக்கோ தொழிலாளிகளுக்கோ பணத்தை விநியோகம் செய்வதாலும் ஓரளவு பயன்தான் ஏற்படும். வேலையின்மைத் திட்டங்கள் (unemployment schemes), சமூகக் கொடைகள் (social grants) மூலம் தொழிலாளிகளுக்கும், மானியங்கள் (subsidies) மூலம் முதலாளிகளுக்கும் வாங்கும் சக்தியை விநியோகம் செய்வதன் மூலம் பொருளியல் சுணக்கத்தின் ஆழம் குறைக்கப்படுகிறது. இதேபோல் அரசாங்கம் பல பொது வேலைகளை (public works) மேற்கொள்வதாலும் உற்பத்தி தடைபடாது நடக்க உதவியாயிருக்கிறது. ஆனாலும், பணம் விநியோகிக்கும் இம் முறைகள் எதுவும், செழிப்பையும், மந்தத்தையும் தடுக்க முடியாது.

தற்போதைய முறையின் பொருளியல் முட்டுப்பாடுகளைத் தவிர்க்க "சமூகக் கடன்" (social credit) கொடுக்கலாம் என்ற ஒரு கருத்தும் உலவுகிறது. இக் கொள்கை புதியதல்ல வானாலும், கடந்த முதல் உலகப் போருக்குப் பின் மேஜர் டக்ளஸ் (Major Douglas) என்பவரால் மீண்டும் உயிர்ப்பிக்கப்பட்டது. இக்கொள்கையின் சாராம்சம் என்னவெனில், போதிய வாங்கும் சக்தி மக்களுக்கின்மையால் உற்பத்தி தடைபடுகிறது என்பதே. இது விலைவாசிகள் உயர்வால் விளைந்ததென்பதும், இதற்குக் காரணம் மக்களிடைப் போதிய பணம் இன்மையே என்பதும் அவர் கூற்று. இக் கஷ்டத்தைத் தீர்க்க விலைவாசிகளைக் கட்டாயமாகக் குறைக்கவேண்டுமென்றும், அவ்வாறு குறைப்பதால் உற்பத்தியாளர்களுக்கும், வணிகர்களுக்கும் ஏற்படும் நஷ்டத்தை அரசாங்க மானியங்கள்

மூலமோ, அல்லது எல்லோருக்கும் போதிய பணத்தை விநியோகம் செய்வதன் மூலமோ சரிக்கட்ட வேண்டும் என்றும் இக்கொள்கையாளர் கூறுகின்றனர். இம்முறையால் செழிப்பும் ஏற்படாது ; மந்தமும் ஏற்படாது.

இக்கொள்கை வசீகரமுடையதாயிருப்பினும், இதன் அடிப்படை தவறு. எப்பொழுதுமே வாங்கும் சக்தி குறைவாகயில்லை. சில சமயங்களில் சாமான்களுக்கு அதிகம் கிராக்கி ஏற்படுவதால் செழிப்பு (boom) ஏற்படுகிறது. இக் கிராக்கி முடிந்த பொருள்களுக்கு (finished products) மட்டுமல்ல; மூலப் பொருள்களுக்கும் (raw materials), இடைநிலைப் பொருள்களுக்கும் (intermediate products) இருக்கிறது. உற்பத்தியாகும் பொருள்களில் பெரும்பகுதியும் இடைநிலையிலேயே உள்ளது. உற்பத்தி தங்குதடையின்றித் தொடர்ந்து நடைபெறுவதற்கு அடிப்படை லாபம் கிடைக்குமா என்பதே. ஆகவே நெருக்கடி ஏற்படுவதற்குக் காரணம் தொழிலாளிகள் வாங்கும் சக்தியல்ல, அமித உற்பத்தியே என்பது தெளிவு.

இதற்குச் சொல்லப்படும் பரிகாரமும் அனுபவ சாத்தியமானதல்ல. மக்கள் எல்லோருக்கும் சமமாகப் பணத்தைப் பகிர்ந்து கொடுப்பதால் முதலாளிகளின் செல்வம் சிறிது கூடும் என்பது உண்மையே. ஆனால் தொழிலாளிகள் செல்வமும் அதேபோல் கூடுமா?

தானும் தன் குடும்பத்தாரும் வேலை செய்யும் நன்னிலையில் இருப்பதற்குத் தொழிலாளி தன் உழைப்பை நல்க வேண்டும். ஒவ்வொரு தொழிலாளிக்கும் போதிய சமூக வருவாய், (social dividend) கிடைத்தால், அவன் வேலை செய்யாமலே வயிறு வளர்க்கலாம். குறைவாக சமூக வருவாய் கிடைத்தால் அவன் உழைக்க வேண்டும். ஆனால் அவன் உழைப்பிற்குக் கிடைக்கும் ஊதியம், எவ்வளவு சமூக

வருவாய் பெறுகிருனே அவ்வளவு குறைக்கப்படும். இது எதுபோலென்ருல், உபகாரச் சம்பளம் பெறுபவர்கள் குறைந்த ஊதியத்திற்கு வேலைக்கு வருவதைப் போன்றது. இவ்வாறு கூலி குறைந்தால் சாமான்களுக்குள்ள கிராக்கி குறையும். கிராக்கி குறைந்தால் இத் திட்டம் முற்றும் சீர்குலையும்.

கூலி நிர்ணயம், விலை நிர்ணயம், இவற்ருல் கூலி குறைவதையோ அல்லது விலை ஏறுவதையோ தடுப்பது ஏட்டளவில் சாத்தியமாயினும், நடப்பில் சாத்தியமில்லை. பல்லாயிரக்கணக்கான முதலாளிகள் ஒருவரோடொருவர் தொடர்பின்றி நடக்கின்றனர். இம்முறையில், ஒவ்வொரு படியிலும் கூலிகளையோ விலைகளையோ கட்டுப்படுத்துவது சாத்தியமல்ல. ஓரளவு லாப நோக்கைக் கட்டுப்படுத்தும் நிலை ஏற்படுமானல், லாபத்தையே சார்ந்திருக்கும் முதலாளித்துவ உற்பத்தி முறையை மக்கள் ஏன் சகித்துக் கொண்டிருக்க வேண்டும் என்பது புலப்படவில்லை. தற்போது, உற்பத்தி முறை லாப நோக்கைச் சார்ந்திராத நாடு ஒன்று உண்டென்ருல், அது சோவியத் யூனியன் ஒன்றுதான்.

## மூன்றும் அதிகாரம்

### பணத்தின் மதிப்பு (Value of Money)

பணத்திற்குப் பிரதியாக எவ்வளவு சாமான்கள் வாங்கலாம் என்பதைத்தான் பணத்தின் மதிப்பு என்கிறோம். பணத்தின் மதிப்பை வாங்கும் சக்தி (purchasing power) என்றும் கூறலாம். விலை வாசிகள் ஏறும் பொழுது பணத்தின் மதிப்புக் குறைகிறது. (உ-ம்.) முன்பு இரண்டணு விலையாயிருந்த ஒரு தஸ்தாக் காகிதம் தற்பொழுது ஆறணு என்றால் விலை மூன்று மடங்கு அதிகரித்திருக்கிறதென்றும், அதேசமயம் பணத்தின் மதிப்பு மூன்று மடங்குக் குறைந்திருக்கிறதென்றும் பொருள். அதேபோல் விலைவாசிகள் இறங்கும் பொழுது பணத்தின் மதிப்பு உயர்கிறது. முன்னர்க் காலணுவுக்கு விற்ற சுருட்டு, இப்பொழுது காலணுவுக்கு இரண்டென்றால் விலை 50% குறைந்திருக்கிறதென்றும், அதே சமயம் பணத்தின் மதிப்பு 50% கூடியிருக்கிறதென்றும் பொருள். இங்ஙனமாகப் பணத்தின் மதிப்பிற்கும் விலை வாசிகளுக்கும் நேர்மாறான (inverse) தொடர்பு இருக்கிறது.

### பணத்தின் மதிப்பை அளத்தல்
(Measurement of the Value of Money)

விலைவாசிகள் எல்லாம் ஏககாலத்தில் சேர்ந்தாற் போல் ஏறினாலும் அல்லது இறங்கினாலும், பணத்தின் மதிப்பில் மாறுதல்களை அளப்பது சுளுவாயிருக்கும். ஆனால் விலைவாசிகள் எல்லாம் ஏககாலத்தில் சேர்ந்தாற்போல் ஏறுவதும் இல்லை; இறங்குவதும் இல்லை. சில பொருள்களின் விலைகள் ஏறும்; சில இறங்கும்; சில இருந்தபடியே இருக்கும். அபூர்வமாக, மிகப் பெரிய விரைவான இயக்கம் ஏற்படும்பொழுது, ஏறக்குறைய எல்லா விலைவாசிகளும்

ஒரே முகமாக மாறும். அப்பொழுதுகூட, சில சாமான்களின் விலை பிறவற்றைவிடக் குறைவாக ஏறலாம் அல்லது இறங்கலாம். விலைவாசிகள் எல்லாம் ஒரே முகமாக மாறியது தெளிவாயிருந்தாலும், எவ்வளவு மாறியிருக்கிறது என்பதை அறுதியிடுவது சிரமமானது. விலைவாசிகளில் எவ்வளவு மாறுதல்கள் ஏற்பட்டிருக்கிறது என்பதை அறுதியிட விலைக்குறியீட்டு எண்கள் முறை (price index numbers) உபயோகிக்கப்படுகிறது. விலைகளில் மாறுதல்களை அளக்க உபயோகிக்கப்படும் ஒரு புள்ளி விவரக் கருவியே (statistical device) குறியீட்டு எண். இம் முறையால் நாம் விலைவாசிகளின் மாறுதல்களை உத்தேசமாகத்தான் அளக்கமுடியுமே தவிரத் திட்ட வட்டமாக அளக்க முடியாது.

## குறியீட்டு எண்களைத் தயாரிக்கும் முறை

சதா கிராக்கி (constant demand) யிருக்கும் பலவித (representative) சாமான்களைத் தேர்ந்தெடுத்து அவை ஒவ்வொன்றின் (குறிப்பிட்ட) சராசரி விலையை ஒரு குறிப்பிட்ட ஆண்டில் குறித்து, பின்னொரு ஆண்டில் நிலவும் விலைகளுடன் அவ்விலைகளை ஒப்பிடுதல்தான் இம்முறை. இங்ஙனம் முதலில் தேர்ந்தெடுக்கப்பட்ட ஆண்டு ஆதார ஆண்டு (base year) எனப்படும். அடுத்தபடியாக அவ்வாண்டில் எல்லா சாமான்களின் விலையையும் உள்ளிட்ட பட்டியல் ஒன்று தயாரிக்க வேண்டும். எடுத்துக்காட்டாக, 1939-ம் வருஷத்தை ஆதார ஆண்டாகக் கொண்டு, அவ்வாண்டு விலைகளை 1953-ம் ஆண்டு விலைகளுடன் ஒப்பிட விரும்புவதாக வைத்துக்கொள்வோம். 1953-ம் ஆண்டில் அச்சாமான்களின் விலை அடங்கிய இரண்டாவது பட்டியல் ஒன்று தயாரிக்க வேண்டும். அவ்விலைகளையெல்லாம் 1939-ம் ஆண்டைய விலையின் சத விகிதங்களாகக் (percentages) கூறுகிறோம். 1939-ல்

ஒரு டன் நிலக்கரி விலை ரூ. 15-ஆகவும், 1953-ல் ஒரு டன் ரூ. 30-ஆகவும் இருந்தால், 1939-ம் ஆண்டு விலையை 100-ஆகவும் (எப்பொழுதும் ஆதார சராசரி (base average) 100 என்றே குறிக்கப்பெறும்), 1953-ம் ஆண்டு விலையை 200-ஆகவும் கூறுகிறோம். பஞ்சின் விலை 1939-ல் 100-ஆகவும், 1953-ல் 60-ஆகவும் இருக்கலாம். 1953-ம் ஆண்டு எல்லா விலைகளின் சராசரியையும் எடுத்தால், அதுதான் 1953-ம் ஆண்டுக்குரிய குறியீட்டு எண்ணாகும். $ 1953-ல் மொத்த (wholesale) விலைகளின் குறியீட்டு எண் 107 என்றால், 1939-ம் ஆண்டைக் காட்டிலும் சராசரி இச் சாமான்களின் விலைகள் 1953-ல் 7% ஏறியிருக்கிறதென்று பொருள். (1939-ல் சராசரி அடையாள எண் 100). சில சாமான்களின் விலைகள் இதைவிடக் கூடுதலாகவும் இருக்கலாம்; குறைச்சலாகவும் இருக்கலாம்.

### ஒரு குறைபாடு

இம் முறையிலுள்ள ஒரு குறைபாடு என்னவென்றால், எல்லாச் சாமான்களையும் சம முக்கியத்துவம் வாய்ந்ததாகக் கருதுவதே. ஆனால் அவையாவும் சம முக்கியத்துவம் வாய்ந்தவையல்ல. நெல்லின் விலை சிறிது ஏறுவது குண்டூசியின் விலை அதிகம் ஏறுவதைக்காட்டிலும் முக்கியமானது.

### குறியீட்டு எண்ணுக்கு முக்கியத்துவம் கொடுத்தல் (weighting an index number)

பொருள்களுக்கு வேறுபட்ட முக்கியத்துவம் கொடுப்பதன்மூலம் இக் குறைபாட்டை நீக்கலாம். முக்கியமான சாமான்களில் மூன்று அல்லது நான்கு ரகத்தைப் பட்டியலில் சேர்ப்பது ஒருமுறை. பல நாடுகளிலிருந்து தருவிக்கப்படும் ஒரு சாமானைத் தனித்தனிப் பட்டியலில்

$ சராசரியைக் கண்டுபிடிப்பதற்குப் பல வழிகள் இருக்கின்றன.

குறிப்பிடுவது ஒரு முறை. உதாரணமாக கனடா, ஆஸ்திரேலியா, அர்ஜெண்டைனு, அமெரிக்க நாடுகளி லிருந்து கோதுமை தருவித்தால் அது நான்கு முறை குறிக் கப்பெறும். இம்முறையால் இறுதிக் குறியீட்டு எண்ணில் (index number) கோதுமை நான்கு மடங்கு அதிக முக்கி யத்துவம் அடையும். அல்லது ஒரே ரக கோதுமையை நான்கு முறை சேர்ப்பதன் மூலமும் இவ்விளைவை அடைய லாம். இம்முறைதான் சாதாரணமாக எல்லோராலும் கையாளப்படுவது. ஆனுல், பொருள்களுக்கு முக்கியத் துவம் கொடுப்பது அக்குறியீடு தொகுப்போரின் கருத்துக் கேற்ப மாறுபடும். மேலும் ஒரு காலத்தில் சரியாக விருந்த முக்கியத்துவங்கள் பிறிதொருகாலத்தில் தவருன தாக விருக்கலாம்.

## குறியீட்டு எண்ணின் பயன்

இவ்வளவு இக்கட்டுகள் இருந்தாலும், குறியீட்டு எண்கள் முறை, பல ஆண்டுகளில் பணத்தின் மதிப்பில் ஏற்பட்ட மாறுதல்களை ஒப்பிட ஒத்தாசையாயிருக்கிறது. ஆனுல் அது இம் மாறுதல்களுக்கான காரணத்தைக் காட்டுவதில்லை. பேராசிரியர் டாஸிக் (Taussig) கூறுவது போன்று குறியீட்டு எண் ஒரு உண்மையான பொருளைச் சுட்டவில்லை. (உ-ம்.) பரிதிக்கும் பூமிக்கும் இடையே உள்ள தூரத்தை அளப்பதற்குப் பல **நோக்கங்கள்** (observations) செய்யப்படுகின்றன. அவை ஒவ்வொன்றும் தவருயிருக்கலாம். ஆனுல் அவைகளின் சராசரி ஒரு குறிப்பிட்ட உண்மையைத் தெரிவிக்கிறது. ஆனுல் ஒரு குறியீட்டு எண் ஒரு குறிப்பிட்ட உண்மையைச் சுட்டிக் காட்டவில்லை. அது விலைவாசிகளின் பொதுவான போக்கை (general trend) ஒரு கோடி காட்டுகிறது. குறியீட்டு எண்ணினுல் நாம் விலைவாசிகளின் போக்கைக் குத்து மதிப்பாகத்தான் கூறலாம். குறியீட்டு எண்ணி லிருந்து எல்லாம் விளங்குவதாக மக்கள் மொழிகிருர்கள். விலைவாசிகளில் ஒரே திக்கில், ஒரே அளவில் மாறுதல்

ஏற்படுவதில்லை. வெவ்வேறு திக்குகளில், வெவ்வேறு அளவில் விலைவாசிகளில் பலதிறப்பட்ட மாறுதல்கள் ஏற்படுகின்றன. சுருக்கி சராசரியைக் கூறுமுகத்தான் நாம் விலைவாசிகளின் பொதுப் போக்கைத் தெள்ளிதின் உணரலாம்.

**வாழ்க்கைச் செலவுக் குறியீடு**
**(Cost of Living Index)**

மொத்த விலைகளைவிடச் சில்லறை விலைகளே அடிக்கடி பெரிதும் மாறுவதால், சில்லறை விலைகள் வாழ்க்கைச் செலவுக் குறியீட்டுக்கு மொத்த விலைகளைவிடச் சரியான அடிப்படை எனலாம். சில வகை வகுப்புத் தொழிலாளருக்குக் கொடுக்கப்படும் ஊதியம் வாழ்க்கைச் செலவுக் குறியீட்டைப் பொறுத்தே இருக்கிறது. கூலியை நிர்ணயிக்கும் எண்கள் அக்கூலி எப்பொருள்களின் மீது செலவழிக்கப்படுகின்றதோ அவற்றின் விலையைப் பொறுத்திருப்பது, சரியே. வாழ்க்கைக்கு இன்றியமையாத செலவுகளான உணவு, உடை, வாடகை, வெளிச்சம், இவற்றுக்கு, குறைந்த வருவாய் உடையவர்கள் செலவிடும் தொகை, பல ஆண்டுகளில் சிறிதுதான் மாறுகிறதென்பது ஆராய்ச்சியால் புலனாகிறது. போர் முதலான எதிர்பாராத சம்பவங்கள் நேர்ந்தால் ஒழிய, பல் வேறுபட்ட வகுப்பினர்கள் அடையும் தேசிய வருவாயின் விகிதம் (proportion) மாறாது. மெய்க்கூலி (real wages) யுடன் ஒப்பிட்டுப் பணக்கூலி (nominal or money wages) உயர்ந்திருக்கிறதா அல்லது தாழ்ந்திருக்கிறதா, அல்லது மாறாமல் ஒரே படியாக இருக்கிறதா என்பதைக் கண்டுபிடிக்க, வாழ்க்கைச் செலவுக் குறியீட்டு எண்கள் பணக்கூலியின் புள்ளி எண்களுடன் ஒப்பிடப்படுகின்றன. பிரிட்டனில் மிக முக்கியமான வாழ்க்கைக் குறியீட்டு எண், தொழில் அமைச்சினால் (Ministry of Labour) தயாரிக்கப்படுகிறது.

# நான்காம் அதிகாரம்

**பணத்திற்கும் பிற பொருள்களுக்கும் உள்ள பொருத்தங்கள்**

திருமணம் செய்வதற்கு முன் ஜாதகப் பொருத்தங்கள் பார்ப்பது போன்று பணத்தைப்பற்றி பிற விஷயங்களைக் கூறுமுன், பணத்திற்கும் பிற பொருள்களுக்கும் உள்ள பொருத்தங்களைப் பார்ப்போம். பணத்தின் மதிப்புப் பிற பொருள்களின் மதிப்பைப்போலவே, உற்பத்தி (supply), கிராக்கி (demand) இவற்றால் நிர்ணயிக்கப்படுகின்றது.

**பணத்திற்கும் பிற பொருள்களுக்கும் உள்ள வேற்றுமைகள்**

இருவகையில் பணத்தின் மதிப்பு, பிற பொருள்களின் மதிப்பைவிட வேறு வகையாக நிர்ணயிக்கப்படுகிறது. உதாரணமாக, ஒரு இறைச்சித் துண்டின் மதிப்பு, அதற்குப் பிரதியாக எவ்வளவு பிற பொருள்களைப் பெறலாம் என்பது மட்டுமன்றி அவ்விறைச்சித் துண்டின் பயனை அளவிடும் கோலாகவும் விளங்குகிறது. ஒரு இறைச்சித் துண்டை அழிப்பதால் மெய்யான பொருளியல் நன்மையில் (true economic welfare) நஷ்டம் ஏற்படும். அதேபோல் பணத்தைப்பற்றியும் கூறலாமா? ஒருவகையில் கூறலாம். பணத்தின் ஒரு அலகை (unit) அழித்தால், அதை வைத்திருந்தவன் முன்னைவிட வறிஞன் ஆகின்றான். ஆனால் சமூகம் முன்னைவிட ஏழை ஆவதில்லை. ஏனெனில், ஒருவன் நாலணாவைத் தொலைத்துவிட்டால், அவன் நாலணா பெறுமான சாமான்கள் வாங்குவதை இழக்கிறான். ஆனால் அதேசமயத்தில் அந்நாலணா பெறுமான சாமான்களை வாங்கும் சக்தி பிறருக்குச் சேர்கிறது. ஆகவே அவர்களின் வாங்கும் சக்தி முன்னைவிட அதிகமாகிறது. ஆனால் ஏககாலத்தில் ஏராளமான பணத்தை அழித்தால், ஒரு இனத்துக்கு, தன் வாணிகத்தை நடத்துவதில் முட்டுப்

பாடு நேரிடலாம். அதனால் பரிவர்த்தனையிலும், உற்பத்தியிலும் சுணக்கம் ஏற்பட்டு, மெய்யான பொருளியல் நன்மையில் குறைபாடு ஏற்படலாம். ஆனால் சாதாரணமாகப் பணத்தின் உபயோகம் அதை உடையவருக்கேயன்றி ஊரார் முழுதுக்கும் அன்று. ஆனால் இறைச்சித் துண்டின் மதிப்பு, அதை வைத்திருப்பவருக்கின்றி சமூகம் பூராவுக்கும் விளையும் நன்மையை அளவிடும் கோலாகும். இதற்குக் காரணம் பணத்தைப் பணத்திற்காக விரும்புபவர் ஒருவருமிலர் என்பதும், அதனால் பிற பொருள்களின் மீது செலுத்தப்படும் ஆதிக்கத்திற்காகவே பணத்தை யாவரும் விரும்புகின்றனர் என்பதுமே.

இன்னொருவிதத்தில் பணம் தனிப்பட்டச் சிறப்பு வாய்ந்தது. அதுதான் பணத்தின் மதிப்பிற்கும், தொகைக்கும் (quantity) உள்ள உறவு. பணம் எவ்வளவுக்கெவ்வளவு அதிகமாக உள்ளதோ அவ்வளவுக்கவ்வளவு குறைச்சல் அதன் மதிப்பு. ஒரு நாட்டில் மொத்தம் பத்து ரூபாயும், பத்து சாமான்களும்தான் இருக்கின்றன என்று வைத்துக்கொண்டால், ஒரு சாமானின் விலை ஒரு ரூபாயாகும். ஐந்து ரூபாய் இருந்தால் ஒரு சாமானின் விலை அரை ரூபாயாகும். இருபது ரூபாய் இருந்தால் ஒரு சாமானின் விலை இரண்டு ரூபாயாகும். ஆகவே பணத்தின் மதிப்பு அதன் தொகைக்கு (quantity) நேர் எதிரானதென்பது பெறப்படும். பணத்தின் தொகை அதிகமாயிருந்தால் மதிப்புக் குறைவு என்பதும், தொகை குறைவாயிருந்தால் மதிப்புக் கூடுதல் என்பதும் தெளிவு. விலைவாசிகள் பணத்தொகைக்கு ஏற்ப மாறுகிறது என்று இதையே வேறு வகையாகச் சொன்னாலும் ஒன்றுதான்.

**விலை மாறுதல்கள்**

*1914*-ம் ஆண்டிலிருந்து விலைவாசிகளில் பெருத்த

மாறுதல்கள் ஏற்பட்டுள்ளன. இதனால் எல்லா ஒப்பந்தங்களும் பொருளியல் உறவுகளும் பாதிக்கப்பட்டன. பொதுவாகக் கூறுமிடத்து படிப்படியாகவும் மெதுவாகவும் விலைவாசிகள் ஏறினால் க) தொழில் வளர்ச்சி ஏற்படும். உ) இன்றியமையாத வர்த்தக, தொழில், கூலி மாறுதல்கள் சுளுவாக மாறும். ங) விலைவாசிகள் ஏற்றத்தால் பொருள்களின் அடக்க விலையும் ஏறும். அங்ஙனம் ஏறுவதால் லாபம் அதிகரிக்காது முன்னைய நிலையிலேயே இருக்கும்.

விலைவாசிகள் திடீரென்று விஷம்போல் ஏறினால், க) வணிகப் பேரங்களில் சலனமும் (uncertainty), உ) பொருளியல் எந்திர சீர்கேடும், ங) செல்வப் பிரிவினையில் எதிர்பாராத தான்றோன்றித்தனமான மாறுதல்களும், ச) தொழில் முதலாளிகளுக்கு லாபமும், ரு) கூலியாட்கள், நிரந்தர ஊதியம் பெறுவோர் (fixed income receivers) இவர்களுக்கு நஷ்டமும், சு) பல அநீதிகளும், விளைகின்றன.

ஏறும் விலைகளால் கீழ்க்கண்டோருக்கு ஊறு ஏற்படுகிறது. க) கடன் கொடுத்தவர்கள், உ) நிரந்தர ஊதியம் பெறுவோர் (உ-ம்.) அரசாங்க ஊழியர். ங) நீண்டகால ஒப்பந்தங்களின்படி ஊதியம் பெறுவோர்—(உ-ம்.) நீண்டகால குத்தகை. ச) கூலியாட்கள், ரு) அரசாங்கத்தாரின் இணக்கம் இன்றி தங்கள் கட்டணங்களை (charges) உயர்த்தமுடியாத கம்பெனிகள், சு) அரசாங்கம், அரசாங்க வரிகளின் வாங்கும் சக்தி குறையும்.

விலைவாசிகள் ஏற்றத்தால் நன்மை பெறுவோர் க) தொழில் முதலாளிகள், வியாபாரிகள் ; உ) அரசாங்கம். தேசியக் கடனின் உண்மையான சுமை குறையும்.

**விலைவாசிகள் இறக்கத்தின் விளைவுகள்**

க) தொழில் வளர்ச்சிக்குக் குந்தகமும், உற்பத்தி

மந்தமும், பொருளியல் நடவடிக்கையில் (economic activity) சுணக்கமும் ஏற்படுகிறது. உ) திறமைக் கூடுதலால் (increased efficiency) விலைவாசிகள் இறங்கினால் ஒரு வகுப்பாரும் கஷ்டப்பட வேண்டியதில்லை. ங) பணத் தொகை சுருக்கத்தினால் விலைவாசிகள் இறங்கியிருப்பின், நிரந்தர ஊதியம் பெறுவோர் நன்மை பெறுவர். ச) கூலி, வாடகை, அடமானங்கள், வட்டி விதங்கள் முதலியவை விலைவாசிகள் விழும் அளவுக்கு விழாது. ரு) தொழில் முதலாளிகளும் வியாபாரிகளும் நஷ்டம் அடைவார்கள். சு) அரசாங்கத்தின் வரவு செலவுத் திட்டத்தில், வருமானம் குறைவதால் துண்டு விழலாம். உண்மையான தேசியக் கடனின் சுமை ஏறும்.

### விலைகளுக்கும் வேலைக்கும் (employment) உள்ள உறவு

விலைவாசிகள் ஏற்றத்தால் வேலையில்லாத பலருக்கு வேலை கிடைக்கும். ஏனெனில், க) ஒவ்வொரு வியாபாரியும், கையிருப்புக் (stock) குறையாதிருக்க, விலை மேலும் ஏறுவதற்கு முன்னர் சாமான்களுக்குப் புது ஆர்டர் (order) கொடுக்கிறான். உ) உற்பத்திப் பெருக்கமும், ங) அதிக லாபமும் ஏற்படுகிறது.

விலைவாசிகள் இறக்கத்தால் வேலையில்லாத் திண்டாட்டம் பெருகும். ஏனெனில், க) சாமான்களை வாங்குவோர், விலைகள் இறங்குமட்டும் கையிருப்பைக் கரைப்பார்களேயன்றிப் புதிய ஆர்டர்கள் கொடுக்கமாட்டார்கள்; அங்ஙனம் கொடுத்தாலும் சிறிதளவுதான் கொடுப்பார்கள். உ) எந்திர, கன (heavy), கட்டடத் தொழில்களில் சுணக்கம் ஏற்படும். ங) லாபக் குறைவால் பலர் வேலையினின்று நீக்கப்பெறுவர்.

ஒரே படியாக விலைகள் இருப்பது மிகுந்த திருப்திகரமானது. ஏனெனில் கடனாளி, கடன்காரர் இருவருக்கு

மிடையேயும், நிரந்தர, மாறும் ஊதியம் பெறுவோரிடையேயும் (receivers of fixed and variable incomes), சுமுகமான உறவு ஏற்படும். அதுவுமன்றி அதனால் வர்த்தகத் துறையிலும், தொழிற்றுறையிலும் நல்ல முன்னேற்றமும் ஏற்படும். ஏனெனில், அதனால் விலைவாசிகள் மாற்றங்களால் ஏற்படும் நஷ்டங்கள் தவிர்க்கப்படுகின்றன. நீண்ட காலத் திட்டங்களையும் தொடங்கலாம்.

## பண மதிப்பில் மாறுதல்கள்

### பணப் பெருக்கம் (Inflation)

அமிதப் பண வெளியீடு பணப்பெருக்கம் என்று கூறப்படுகிறது. வாங்கும் சக்தி பெருகியதனால் விலைவாசி ஏறினாலும், விலைவாசி உயர்ந்ததனால் வாங்கும் சக்திப் பெருகினாலும், பணப்பெருக்கம் எனப்படும் என்று திரு. பால் ஐன்ஸைக் (Paul Einzig) கூறுகிறார்.

பணப்பெருக்கம் பலவகைப்படும். க) பணப் பெருக்கம் (monetary inflation) தேசியக் கடனைத் திருப்பிக்கொடுப்பதற்காக அரசாங்கம் வெளியிடும் ஏராளமான காகிதப் பணமும், செலாவணியின் அளவு குறையாது, பொருள் உற்பத்தியில் குறைவு ஏற்படுவதும் இதன்பாற்படும்.

உ) பாங்குப் பணப்பெருக்கம் (credit inflation): பாங்குகளிலிருந்து அரசாங்கம் பெருவாரியாகக் கடன் வாங்குவதன் மூலமும், சாமான்கள், கடன் பத்திரங்கள் (securities) இவைகளின் விலை ஏறி, அவற்றின்பேரில் கொடுக்கப்படும் கடன்கள் மூலமும் இவ்வகைப் பணப் பெருக்கம் ஏற்படலாம்.

ங) பணப்பெருக்க சாத்தியம் (Inflationary Potential): கடந்த உலகப் போரின்போது, மக்கள் கட்டாயமாகச் சேமிக்கவும், அவ்வாறு செலவிடாது சேமித்து

வைத்ததை அரசாங்கத்திற்குக் கடன் கொடுக்கவும், அரசாங்கத்தார் மேற்கொண்ட பலவகைக் கட்டுப்பாடுகளினுல்–(உ–ம்.) விலைவாசிகள் கட்டுப்பாடு, உணவுப் பங்கீடு (rationing) முதலியன–இது ஏற்பட்டது. இக் கொள்கையால் மக்கள், மனமின்றி சேமித்து வைத்ததைக் கட்டுப்பாடுகள் தளர்த்தப்பட்டவுடன் செலவழிக்க விழைகிருர்கள். இப் "பணப்பெருக்க சாத்தியத்தை" மக்கள் மனதார அதிகம் சேமித்துவைக்க விரும்புவதால் சமாளிக்கலாம்.

### பணப்பெருக்கத்தை எதிர்ப்பதில் உள்ள சங்கடங்கள்

பணப்பெருக்கத்தை எதிர்த்துச் சமாளிப்பதில் அரசாங்கத்திற்குச் சிரமம் இருக்கிறது. ஏனெனில், பணப்பெருக்கம் க) வட்டியில்லாத கடன் அல்லது வரிக்குச் சமானம். எங்ஙனமெனில், பணப்பெருக்கத்தால் விலைவாசிகள் உயர்கின்றன. அதனுல் மக்கள் முன்னைவிட கூடுதல் தொகையை அதேயளவு சாமான்கள் வாங்கச் செலவழிக்க நேரிடுகிறது. இதனுல் மக்கள் நஷ்டம் அடைகின்றனர். வரிகள் மூலம் இத் தொகையை அரசாங்கத்தார் வசூலித்தாலும் மக்களுக்கு நஷ்டமே. உ) மக்கள் பன்னுள், பணப்பெருக்கம் ஏற்பட்டதென்பதை உணராதிருக்கிருர்கள். ங) பணத்தைக் கையாளும் ஒவ்வொருவரும் பாதிக்கப்படுவதால், பணப்பெருக்கத்தின் விளைவுகளினின்று ஒருவரும் தப்ப முடியாது. ச) இவ் வரியின் சுமை பரவலாகயிருக்கிறது. ரு) காகிதம், அச்சுக்கூலி இவற்றைத் தவிர்த்து இவ்வரியைத் தண்டுவதில் யாதொரு செலவுமில்லை. சு) பணப்பெருக்கத்தால் தேசீயக் கடனின் சுமை குறைகிறது. எ) இதனுல், அதிக நேர்வரி (direct tax) போட்டு மக்களின் ஆதரவை இழப்பதிலிருந்து அரசாங்கம் தப்புகிறது. அ) முதலீடு செய்பவர்களிடம் (investors) சமய சந்தர்ப்பம் தெரியாமல் வேண்டுகோள் விடுப்பதினின்று பணப்பெருக்கம் அரசாங்கத்தைக் காக்கிறது.

### அமிதப் பணப்பெருக்கத்தின் விளைவுகள் (Results of Excessive Inflation)

அமிதப் பணப்பெருக்கத்தால், க) விலைவாசிகள் விஷம் போல் ஏறுகின்றன. உ) இன்னும் விலைகள் ஏறுமோ என்றஞ்சி மக்கள் கண்ட கண்ட சாமான்களை வாங்குவதனால் பூரண வேலை (full employment) ஏற்படுகிறது. ங) வர்த்தகர்களும், தொழில் முதலாளிகளும் அதிக வருவாயை அடைகின்றனர். ச) வாழ்க்கைச் செலவு உயர்வதாலும், கூலி அதற்குச் சமமாக உயராததாலும் சமூகத்தில் அதிருப்தி ஏற்படுகிறது. ரு) பணப்பெருக்கத்தால், அரசாங்கத்தின் வரவு செலவுத் திட்டத்தில் துண்டு விழுகிறது. சூ) செலாவணியின் எதிர்கால மதிப்பில் மக்களுக்கு நம்பிக்கையில்லாமல் போகலாம். அதனால் அ) சேமிப்பு நிற்கும். ஆ) வியாபார நிலை நிச்சயமற்ற தன்மையை அடைவதால் வியாபாரம் செய்வது அசாத்தியமாகும். இ) செலாவணியிலிருந்து ஓட்டம் (flight from currency) ஏற்பட்டு அதனால் மக்கள், செலாவணிக்குப் பிரதியாக நீடித்து இருக்கக்கூடிய பொருள்களையாவது, அல்லது பொன்னோடு தொடர்புகொண்ட பிற நாட்டுச் செலாவணிகளையாவது, வாங்க முற்படலாம். எ) தேசியக் கடனின் மெய்யான சுமை குறைகிறது.

### பணப்பெருக்கத்தைக் கட்டுப்பாடு செய்யும் முறைகள்

பணப்பெருக்கத்தைக் கட்டுப்படுத்தக் கீழ்க்கண்ட முறைகளைக் கையாளலாம். க) பொருள்களை வாங்குவோரின் வாங்கும் சக்தியை (purchasing power) மட்டுப்படுத்தலாம். அ) பங்கீடு, ஆ) வாங்கும் வரிகள் (purchase taxes), இ) தனிப்பட்டவர்கள் வருவாயைக் குறைக்கக் கூடுதல் வரிகள், ஈ) மக்கள் சுயமாகச் சேமித்து வைப்பதற்கு ஊக்கம் அளித்தல், உ) கட்டாயச் சேமிப்பு இவற்றின்மூலம் வாங்கும் சக்தியை மட்டுப்படுத்தலாம் ஊ.) விலைவாசிகள் கட்டுப்பாடு (price controls),

உ) கட்டாயச் சேமிப்பு இவற்றின் மூலம் மட்டுப்படுத்தலாம், ங) கூலி, லாபக் கட்டுப்பாடு, ச) நிலம், மூலப் பொருள்கள் இவற்றை இன்றியமையாத தேவைகளுக்கு மட்டும் ஒதுக்குதல், ஞ) உற்பத்திப் பெருக்கம்.

**பணச் சுருக்கம் (Deflation)**

செலாவணியின் தொகையைக் குறைத்தலுக்குப் பணச் சுருக்கம் என்று பெயர். முன்னைய பணப் பெருக்கம் அரசாங்கத்தின் நடவடிக்கையால் ஏற்பட்டதெனின், பணச் சுருக்கம் அ) அதிக வரியினாலும், ஆ) குறைந்த அரசாங்கச் செலவினாலும் ஏற்படலாம். அல்லது பாங்குகளிடமிருந்து அ) கடன் வாங்குவதை ஊக்காமலும், ஆ) சேமிப்பை ஊக்கியும் பணச் சுருக்கத்தைக் கொணரலாம். உற்பத்திப் பெருக்கத்தினாலும் பணச் சுருக்கம் ஏற்படலாம்.

**பணச் சுருக்கத்தின் விளைவுகள்**

க) விலைவாசிகள் இறங்கும். உ) வேலையின்மை அதிகரிக்கும். ங) வாழ்க்கைச் செலவு குறையும். ச) வியாபாரச் சுணக்கத்தினால் பல கம்பெனிகள் திவாலா ஆகலாம். ஞ) வியாபார மந்தத்தினால் தொழிலில் முதலீடு செய்வது குறையும். டு) வேலையின்மையாலும், லாபக் குறைவாலும், சமூகத்தின் வாங்கும் சக்தி குறையும்.

**மிதப் பணப் பெருக்கமும், பணப்பெருக்க மின்மையும் (reflation and Disinflation)**

விலைவாசிகள் வீழ்ச்சியைத் தடுக்கவோ அல்லது வீழ்ந்த விலைவாசிகளை மீண்டும் முன்னிருந்த நிலையில் நிறுத்தவோ, செலாவணியை அல்லது பாங்குப் பணத்தை (bank credit) விரிவடையச் செய்யும் முயற்சிக்கு மிதப் பணப்பெருக்கம் என்று பெயர். விலைவாசிகள் ஏறுவதைத் தடுக்கவோ அல்லது ஏறிய விலைவாசிகளை இறக்கி மீண்டும் முன்னிருந்த நிலையில் நிறுத்தவோ, செலவாணியை அல்லது பாங்குப் பணத்தைச் சுருங்கச் செய்யும் முயற்சிக்குப் பணப்பெருக்கமின்மை என்று பெயர்.

# ஐந்தாம் அதிகாரம்

## பணத்திட்டங்கள்

### ஒரு உலோக முறை

ஒரே ஒரு உலோகம் செலாவணியாக அநுஷ்டிக்கப் பட்டு எல்லாக் கொடுக்கல் வாங்கல்களுக்கும் சட்ட பூர்வமான பணமாகச் செய்யப்பட்டால் அதற்கு ஒரு உலோக முறை (monometallism) என்று பெயர். அவ்வுலோகம் பொன்னாக இருந்தால் பொன் திட்டமென்றும், வெள்ளியாக இருந்தால் வெள்ளித்திட்டம் என்றும் கூறப் படும். சாக்ஸன்கள் (Saxons) காலத்திலிருந்து 1717 வரை இங்கிலாந்து வெள்ளித் திட்டத்தை அநுசரித்தது. சிறு தொகைகளைக் குறிப்பிடும் காகித நோட்டுகளும், மட்ட உலோகங்களில் அச்சடிக்கப்பட்ட அடையாள நாணயங் களும் வழங்கலாமாயினும், அவையெல்லாம் வரம்பில் சட்ட பூர்வமான பணம் ஆகா.

### இரு உலோக முறை

இரு உலோகங்கள் (பொதுவாகப் பொன்னும் வெள்ளியும்) செலாவணியாக அநுஷ்டிக்கப்பட்டு வரம்பில் சட்ட பூர்வமான பணமாகச் செய்யப்பட்டால் அதற்கு இரு உலோகமுறை (bimetallism) என்று பெயர். இம் முறையை அநுசரிக்கும் நாடு பின் கண்ட விதிகளைக் கடைப் பிடிக்க வேண்டும். க) தன் பண அலகை ஒரு குறிப்பிட்ட அளவு பொன்னுக்கும், ஒரு குறிப்பிட்ட அளவு வெள்ளிக்கும் சமம் என்று அறிவிக்க வேண்டும். எடுத்துக்காட்டாக 1792-ம் ஆண்டைய அமெரிக்க நாணயச் சட்டம் (American Coinage Act) ஒரு டாலர், 24·75 கிரயின்கள் (grains) சுத்தத் தங்கத்திற்கும், 371·25 கிரயின்கள் சுத்த

வெள்ளிக்கும் சமம் என்று அறிவித்தது. அதனால் ஒரு அவுன்ஸ் தங்கத்திற்கு பதினைந்து அவுன்ஸ் வெள்ளி ஈடு என்பது பெறப்பட்டது. உ) யார் யார் எவ்வளவு பொன், வெள்ளியைக் கொணர்ந்தாலும் அட்டியின்றியும், வரையின்றியும் நாணயங்களாக மாற்றிக் கொடுக்க அரசாங்கம் ஒப்புக்கொள்ள வேண்டும். ங) பொன்னையும் வெள்ளியையும் ஏற்றுமதி அல்லது இறக்குமதி செய்வதற்கு யாதொரு விதமான தடையும் இருக்கக் கூடாது. ச) பாங்குப் பணத்தை, எப்பொழுது வேண்டுமானாலும், பொன் அல்லது வெள்ளி நாணயமாக, மாற்றுவதற்கு வசதி இருக்க வேண்டும்.

### இரு உலோக முறை வரலாறு

கி. பி. 1803–ல் பிரான்ஸ் இரு உலோக முறையை அநுசரித்தது. கி. பி. 1865-ல் லத்தீன் யூனியன் (Latin Union) நாடுகள் (பிரான்ஸ், பெல்ஜியம், ஸ்விட்ஸர்லந்து இத்தாலி.) இம்முறையைப் பின்பற்றின. கி. பி. 1792-ல் அமெரிக்க ஐக்கிய நாடுகள் இரு உலோக முறையைப் பின்பற்றியது. இறுதியில் பல வாதப் பிரதிவாதங்களுக்குப் பின் 1900–ல் இம்முறை கைவிடப்பட்டது.

### சாதக பாதகங்கள்

இரு உலோக முறையை அநுசரிப்பதில் உள்ள அநுகூலங்கள்: க) இரு உலோகங்களின் மொத்தக் கூட்டு உற்பத்தி, அவற்றின் ஒவ்வொன்றின் தனித்தனி உற்பத்தியைப் போல் அவ்வளவு மாறுபடாது. உ) இம்முறையினால் விலைவாசிகள் அதிகம் மாறாமல் ஒரேபடியாயிருக்கும். ங) உலகில் உள்ள எல்லா நாடுகளும் ஒரே உலோக முறையைப் பின்பற்றினால், உலகில் உற்பத்தியாகும் பொன் அதற்குப் போதாது. ச) இறுதியாக, இம் முறையினால் பொன்னை உபயோகிக்கும் நாடுகளுக்கும் வெள்ளியை உபயோகிக்கும் நாடுகளுக்கும் இடையே

நிரந்தரப் பரிவர்த்தனை வீதம் ஏற்படுத்தப்படும். இரு உலோக முறையை அநுசரிப்பதில் உள்ள சில பிரதிகூலங்கள் : க) அடிக்கடி சந்தை விகிதத்தில் (market ratio) ஏற்படும் மாறுதல்களால், அச்சு விகிதத்தை (mint ratio) நிலையாக வைத்திருக்க முயல்வதில் சில சங்கடங்கள் ஏற்படுகின்றன. உ) கிரஷமின் விதியால் குறைவாக மதிக்கப்பட்ட உலோகம் செலாவணியினின்றும் நீக்கப் படுதல், இம்முறையிலுள்ள மற்றொரு குறைபாடு. எடுத்துக்காட்டாக, அரசாங்க அச்சகத்தில் (mint) ஒரு அவுன்ஸ் பொன்னுக்குப் பதினாறு அவுன்ஸ் வெள்ளியைப் பெறலாம் என்றும், ஆனால் அதே சமயம் சந்தையில் ஒரு அவுன்ஸ் பொன்னுக்குப் பதினைந்து அவுன்ஸ் வெள்ளி யைத்தான் பெறலாம் என்றால், ஒருவரும் வெள்ளியை அச்சகத்திற்குக் கொணர மாட்டார்கள். அச்சகத்தில் வெள் ளியை நாணயமாக மாற்றிப் பின்னர் உபயோகிப்பதைக் காட்டிலும், வெள்ளியைக் கட்டியாகவே உபயோகித்தால் அதிக மதிப்பு இருக்கிறது. அதற்கு மாறாக, சந்தையில் ஒரு அவுன்ஸ் பொன்னுக்குப் பதினேழு அவுன்ஸ் வெள்ளியைப் பெறலாம் என்றால், ஒருவரும் பொன்னை அச்சகத்திற்குக் கொணர்ந்து நாணயமாக மாற்றித் தரும்படிக் கேட்க மாட்டார்கள். பொன்னை வைத்திருப் பவன், பதினாறு அவுன்ஸ் வெள்ளி பெறுமானமுள்ள டாலர் நாணயங்களையே அச்சகத்திலிருந்து பெறமுடியும். ஆனால் அதைச் சந்தையில் வெள்ளியாக மாற்றினால் பதினேழு அவுன்ஸ் கிடைக்கும். இதைக் கொண்டு அச்ச கத்தில் கூடுதலான டாலர் நாணயங்களைப் பெறலாம். இவ்விதமான நிலையில் அச்சகத்திற்குக் கொடுபடும் உலோகத்திற்கு அமித மதிப்புள்ள (overvalued) உலோகம் என்று பெயர். அங்ஙனம் அமித மதிப்புள்ள உலோகம் மட்டுமே செலாவணியில் நிற்கும்; நாணயமாக மாற்றப் படும். குறைவாக மதிப்புள்ள (undervalued) உலோகம் செலாவணியிலிருந்து அகலும்.

அமித மதிப்புள்ள உலோகத்தால் குறைவாக மதிப்புள்ள உலோகம் செலாவணியிலிருந்து அகற்றப் படும் போக்கிற்குக் கிரஷம் விதி (Gresham's law) என்று பெயர். ஸர் தாமஸ் கிரஷம் பதினாறும் நூற்றாண்டில் இங்கிலாந்தில் எலிஸபெத் மகாராணியின் பண ஆலோசக ராயிருந்தார். அவரால் நுவலப்பட்ட காரணம் பற்றி இவ்விதிக்குக் கிரஷம் விதி என்ற பெயர் ஏற்பட்டது. ஆயினும் அவருக்கு முன்னிருந்த பல அறிஞர்களும் இவ் விதியைச் செவ்வனே உணர்ந்திருந்தனர்.

எல்லா நாடுகளும் ஒன்று சேர்ந்தால் இரு உலோக முறை இனிது இயங்கும். ஆனால் அப்பேர்ப்பட்ட கூட்டு முயற்சியைக் காண்பது அரிதாயிருக்கிறது. மேலும் இம் முறை ஒரு உலோக முறையைவிடச் சிக்கலானதாக இருப்பதால், பல நாடுகளும் இம்முறையைப் பின்பற்ற மனங் கொள்வதில்லை. ஆகவே தற்பொழுது ஒரு நாடும் இரு உலோக முறையைப் பின்பற்றவில்லை.

### பொன் திட்டம்

பொன் திட்டம் என்றால் என்ன? மதிப்புகளைப் பொன்னில் அளக்கும் முறைக்குத்தான் பொன் திட்டம் என்று பெயர். கீழ்க்கண்ட விதிகளை ஒரு நாடு அநுசரித் தால் அது பொன் திட்டத்தை அநுசரிப்பதாகக் கொள்ளப் படும். க) கேட்ட வளவில் அந்நாட்டின் ஸ்டாண்டர்டு செலாவணி—நாணயமாயினும் நோட்டாயினும்—குறிப் பிட்ட எடையுள்ள பொன்னுக்கு மாற்றக்கூடியதாக இருக்க வேண்டும். (உ-ம்.) பிரிட்டனில் 1914 வரையில் சவரன் (sovereign) 123·27 கிரயின்கள் (grains) ஸ்டாண்டர்டு பொன்னுக்குச் சமானமாக இருந்தது. (ஸ்டாண்டர்டு பொன்னில் 11 பங்கு பொன்னும் ஒரு பங்கு மட்ட உலோகமும் இருந்தது.) உ) பொன்னைத் தாராளமாக ஏற்றுமதி இறக்குமதி செய்ய வகையிருக்க வேண்டும்,

## பொன் திட்டத்தின் அலுவல்கள்
## (Functions of the Gold Standard)

ஒரு நாட்டில் மட்டும் பொன் திட்டம் நிலவினுல் அது உள்நாட்டுச் செலாவணியைக் கட்டுப்படுத்தும் கருவியாக இருக்கும். ஏனெனில், அ) பொன் நாணயங்கள் செலாவணியிலிருந்தால் அந்நாணயங்களின் தொகை பொன்னின் அளவைப் பொறுத்திருக்கும். ஆ) நோட்டுகள் செலாவணியிலிருந்து, அவற்றுக்கும் பொன்னுக்கும் சட்டபூர்வமான விகிதம் (legal proportion) இருக்குமாஞலும், பொன் சப்ளை (supply)யைப் பொறுத்திருக்கும் நோட்டுகளின் தொகை. (உ-ம்.) நோட்டுகளின் பெறுமானத்தில் 40% பொன்ஞக இருக்கவேண்டுமென்று வைத்துக்கொள்வோம். நூறு ரூபாய் பெறுமான நோட்டுகள் (நூறு ஒரு ரூபாய் நோட்டுகளாகவோ, ஐம்பது இரண்டு ரூபாய் நோட்டுகளாகவோ, ஒரு நூறு ரூபாய் நோட்டாகவோ எங்ஙனமேனும் இருக்கலாம்.) அச்சடிக்க வேண்டுமென்ருல், நாற்பது ரூபாய் பெறுமானமுள்ள பொன் இருக்க வேண்டும். அதிகமாக ஐம்பது ரூபாய் பெறுமானமுள்ள நோட்டுகள் அச்சடிக்க வேண்டுமென்ருல், புதிதாக இருபது ரூபாய் பெறுமானமுள்ள பொன் பெற்ருலன்றி முடியாது.

ஒரு நாடு மட்டும் பொன் திட்டத்தை அநுசரிப்பதில் இக்கட்டுக்கள் இருக்கின்றன. அவையாவன: அ) போதிய தங்கமின்மை, ஆ) தொடர்ந்து நோட்டுகளுக்குப் பதிலாகத் தங்கத்தை மக்கள் வேண்டிஞல் பொன் திட்டத்தைத் தற்காலிகமாக ரத்துச் (suspend) செய்ய வேண்டிய நிலை.

பல நாடுகளும் பொன் திட்டத்தைப் பின்பற்றிஞல், அது சர்வதேசக் கடனைத் தீர்க்கும் ஓர் சர்வதேசக் கருவியாகப் பயன்படுகிறது. எங்ஙனமெனில், க) பொன்னை

உபயோகிக்கும் பல நாடுகளிலும் பொன் நாணயங்கள் செலாவணியில் இருக்கும் உ) இத் தேசிய செலாவணிகள் (national currencies) குறிப்பிட்ட விதங்களில் ஒன்றற் கொன்றுப்பரிவர்த்தனை ஆகும். ஊ) ஒவ்வொரு செலா வணியிலும் இருக்கும் பொன்னின் அளவுக்குத் தக்கவாறு அவற்றின் பரிவர்த்தனை விதங்கள் நிர்ணயிக்கப்படும். (உ-ம்.) ஒரு பவுன் ஸ்டர்லிங் (pound sterling), 4·86 டாலருக்கும் (dollar), 25·22 பிராங்குகளுக்கும் (francs) பரிவர்த்தனை ஆகும். ஏனெனில், அவை ஒவ்வொன் றிலும் இருக்கும் தங்கத்தின் அளவு சமம். எ) பொன்னை ஒரு நாட்டிலிருந்து இன்னொரு நாட்டுக்கு அனுப்பச் செலவாகுமாதலால், கடன் கருவிக (credit instruments) ளான பரிவர்த்தனைச் சீட்டுகள் (bills of exchange) சர்வ தேச வியாபாரத்தில் உபயோகப்படுத்தப்படும். ஏ) அந்நியச் செலாவணிகளின் பரிவர்த்தனை விதங்கள் (rates of foreign exchanges) கிட்டத்தட்ட ஒரே படியில் இருக்கும். ஐ) பொன் தாராளமாக ஒரு நாட்டிலிருந்து இன்னொரு நாட்டிற்கு ஏற்றுமதி அல்லது இறக்குமதி செய்யப்படும். எ) ஆகவே ஒவ்வொரு நாட்டின் செலாவணியும், சர்வதேசப் பணமான (international money)ப் பொன்னின் ஒரு கூறாகக் காணப்படும்.

**பொன் திட்டத்தின் விதிகள்**
(The Rules of the Gold Standard)

கீழ்க்கண்ட விதிகள் அநுசரிக்கப்பட்டால்தான் சர்வதேசப் பொன் திட்டம் இயங்கும். அ) வேண்டிய மட்டும் ஒரு நாட்டிலிருந்து இன்னொரு நாட்டிற்குப் பொன் அனுப்ப அநுமதிக்கப்பட வேண்டும். ஆ) விலைகளைப் பாதிக்காத வகையில் பொன்னை ஒரு நாட்டிலும் சேமித்து வைக்கக் கூடாது.

ஒரு நாட்டில் பொன் நாணயங்கள் மட்டும் செலா வணியிலிருந்தால் என்ன நேரும் என்பதைக் காண்போம்,

எடுத்துக்காட்டாக, பிரிட்டனில் பொன் நாணயங்கள் மட்டும் வழங்குவதாக வைத்துக் கொள்வோம். பிரிட்டனில் இறக்குமதிகள் ஏற்றுமதிகளைவிட அதிகமென்றால், பிரிட்டன் நாணயங்களைப் பிற நாடுகளுக்கு அனுப்பும். அதனால் பிரிட்டனில் செலாவணியிலிருக்கும் நாணயங்களின் தொகை குறையவே விலைவாசிகள் குறையும். குறையவே வருவாயும் சுருங்கும். வருவாய் சுருங்கவே மக்களின் செலவும் சுருங்கும். இதனால் இறக்குமதிகள் மீது செலவிடுவதும் குறையும்; இறக்குமதிகளும் குறையும். அதே சமயம் அடக்கவிலை குறைவதால், விலைவாசிகள் குறைய அதனால் ஏற்றுமதி அதிகரிக்கும். இவ்வாறாக கொடைகள் சமநிலை (balance of payments)யில் தானாகவே சமன் ஏற்படும்.

பொன்னாகிய அடித்தளத்தின்மீது நோட்டுகளும் பாங்கு டிபாசிட்டுகளும் ஆகிய மேல்மாடி கட்டப்பட்டிருக்கிறது. கைவசமிருக்கும் பொன் கரைந்தால், பண வருவாய்களையும் (money incomes), செலவினங்களையும் குறைக்க மத்திய பாங்கு அல்லது அரசாங்கம் நடவடிக்கை எடுக்க வேண்டும். அதே போல் பொன்னைப் பெறும் நாடுகள் பண வருவாய்களையும், செலவினங்களையும் அதிகரிக்க நடவடிக்கை எடுக்க வேண்டும்.

ஒவ்வொரு நாடும் இவ்விதிகளைப் பின்பற்றினால் பல்வேறுபட்ட நாடுகளிடையேயுள்ள கையிருப்புத் தங்கம் அந்நாடுகளின் பண, பாங்குப் பழக்கங்கள் (banking habits), உற்பத்தியின் மதிப்பு இவற்றைப் பொருத்ததாக இருக்கும். (உ-ம்.) செக்கு (cheques)களை அதிகமாக உபயோகிக்கும் பிரிட்டனுக்குப் பிரான்ஸைவிடக் குறைச்சலான பொன் போதும்.

### பொன் திட்டம் இயங்கும் விதம்

பொன் திட்டம் பாங்கு வீதத்தின் (Bank Rate)

மூலம் இயங்குகிறது. அ) மத்திய பாங்கில் (Central Bank) இருக்கும் வேண்டாத (superfluous) தங்கம் இருந்தால், தாராளமாகக் குறைந்த வட்டிக்குக் கடன் கொடுப்பதன் மூலம், மக்களின் வாங்கும் சக்தியை அதிகரிக்கலாம். இதனுல் விலைகள் உயர்கின்றன. இதனுல் தங்கம் நாட்டைவிட்டு வெளியேறி உலகமெங்கும் மலிவான விலைகள் ஏற்படுகின்றன. ஆ) போதிய தங்கம் இல்லாவிடில் பாங்கு வீதம் உயர்த்தப்படும். இதனுல் வாங்கும் சக்தி குறைந்து விலைவாசிகள் குறையும். பண வருவாய் குறையும். இறக்குமதி குறையும்; ஏற்றுமதி கூடும். அதனுல் தங்கம் இறக்குமதியாகும்.

சர்வதேசப் பொன் திட்டத்தில் உள்ள ஒரு பெரிய குறைபாடு என்னவெனில், நீடித்துப் பொன் நாட்டை விட்டு வெளியேறிக் கொண்டிருக்குமாகில், அந்நாட்டி லுள்ள தங்கம் பூராவும் கரையும். அதனுல் அந்நாடு பொன் திட்டத்திலிருந்து விலகும். இக்கதி பிரிட்டனுக்கு 1931-ல் நேரிட்டது.

## பொன் திட்டத்தின் வகைகள்
## (Forms of the Gold Standard)

பொன் திட்டத்தில் நான்கு வகைகள் உள்ளன. அவையாவன: அ) முழுப் பொன் திட்டம் (The Full Gold Standard), ஆ) பொன் கட்டித் திட்டம் (The Gold Bullion Standard), இ) பொன் பரிவர்த்தனைத் திட்டம் (The Gold Exchange Standard), ஈ) பொன் இருப்புத் திட்டம் (The Gold Reserve Standard). இவற்றில் முதல் மூன்று வகைகளும் யாவரும் அறிந்தது. நான்காவது வகை இரண்டாம் உலகப்போருக்கு முன் சில்லாண்டுகளே நிலவியது.

### (அ) முழுப் பொன் திட்டம்

இது பொன் நாணயத் திட்டம் (The Gold Specie or

Coin Standard), பொன் செலாவணித் திட்டம் (The Gold Circulation or Currency Standard) என்றும் பெயர் பெறும். இந்தத் திட்டத்தின் அம்சங்களாவன: அ) பொன் நாணயங்கள் தாராளமாக செலாவணியில் இருக்கும். ஆ) காகிதப் பணத்தைப் பொன் கட்டியாகவோ, நாணயமாகவோ உடனடியாக மாற்ற முடியும். இ) பொன் கட்டியை வரம்பின்றி நாணயங்களாக அச்சடிக்கலாம். ஈ) பொன் நாணயத்தையோ, கட்டியையோ தாராளமாகக் கட்டுப்பாடு ஏதுமின்றி ஏற்றுமதி அல்லது இறக்குமதி செய்யலாம். இவ்விதத் திட்டம், பிரிட்டனில், 1914-க்கு முன் நிலவியது.

**(ஆ) பொன் கட்டித் திட்டம்**

இவ்வகைத் திட்டத்தின் அம்சங்களாவன: அ) நோட்டுகள் செலாவணியில் இருக்கும். ஆ) நோட்டுகளைப் பெருவாரியான அளவில் பொன் கட்டியாக மாற்றலாம். இ) நோட்டுகளைப் பொன் நாணயங்களாக மாற்ற முடியாது. ஈ) பொன் கட்டியைத் தாராளமாக ஏற்றுமதி அல்லது இறக்குமதி செய்யலாம். இவ்வகைத் திட்டம் பிரிட்டனில் 1925-லிருந்து 1931-வரை நிலவியது. பொன் கட்டிகளைத் தாராளமாக ஏற்றுமதி அல்லது இறக்குமதி செய்யலாம். ஆனல் நாணயங்களாக மாற்றுவதற்காகப் பொன்னை வாங்க முடியாது. உதாரணமாக, பிரிட்டனில் குறைந்த அளவு 400 அவுன்ஸாவது (400 அவுன்ஸ் விலை 1699 பவுன்–16–ஷில்லிங்–8 பென்ஸ்) வாங்கவேண்டும் என்றிருந்தது.

**அநுகூலங்கள்**

இவ்வகைத் திட்டத்தை அநுசரிப்பதில் அ) பொன் சிக்கனமாக உபயோகப்படுத்தப்படுகிறது அச்சுக்கூலி தவிர்க்கப்படுவதால். ஆ) எல்லாத் தங்கமும் தேசிய கையிருப்பாக (national reserve) ஒரே இடத்தில் வைக்கப்

படுவதால் தேய்மானம், சேதாரம் ஒன்றுமில்லை. இ) தனிப்பட்ட நபர்கள் கையில் சிறுசிறு தொகையாக இருப்பதற்குப் பதிலாக, தங்கம் மத்திய பாங்கில் தேசிய நன்மைக்காக வைக்கப்படுகிறது. ஈ) இது நிதி பல வீனத்தைக் குறிப்பிடுவதாக மக்கள் கருதலாம்.

## (இ) பொன் பரிவர்த்தனைத் திட்டம்

இவ்வகைத் திட்டத்தின் அம்சங்களாவன: அ) உள் நாட்டில் தங்கம் செலாவணியில் இல்லை. ஆ) செலாவணியை (currency) நேரிடையாகப் பொன்னாக மாற்ற முடியாது. இ) ஒரு நாட்டுச் செலாவணியைப் பிற நாட்டுச் செலாவணியாக மாற்றி, அதற்குப் பொன்னைப் பெறலாம். 1925-க்குப் பின் பல நாடுகள், இந்தத் திட்டம் மூலம் ஒன்றோடொன்று தங்களை இணைத்துக்கொண்டன. (உ-ம்.) இந்தியா, மலேயா, பிலிப்பைன் தீவுகள், ஜெர்மனி, இத்தாலி, பெல்ஜியம்.

அ) இவ்வகைத் திட்டத்தை அநுசரிப்பதால் பொன் சிக்கனப்படுத்தப்படுகிறது. பொன்னை சிப்பமாகக் (packet) கட்டுவது, கையாளுவது, கப்பலேற்றுவது, (பொன்னை வைக்கப்) பாதாளக் கிடங்குகள் (vaults) கட்டுவது முதலிய செலவுகள் தவிர்க்கப்படுகின்றன. ஆ) பொன் நாணயம் செலாவணியில் இல்லாததால் தேய்மானம், சேதாரம் முதலியவை இல்லை. இ) மேலும் பொன்னை வறிதே முடக்கி வைப்பதால் லாபம் ஒன்றுமில்லை. ஆனால் செலாவணியைப் பொன்னை வாங்கப் பயன்படுத்தாது பிற நாடுகளில் முதலீடு செய்தாலும், பிற நாட்டுப் பாங்குகளில் போட்டு வைத்தாலும் லாபமோ, வட்டியோ கிடைக்கிறது. ஈ) முதல் உலகப் போருக்குப் பின், உலகில் இருக்கும் தங்கம், எல்லா நாடுகளின் பணத் தேவைக்கும் போதாது என்று பல அரசியல் அறிஞர்களும், பொருளியல் அறிஞர்களும்

கருதியதால், பொன் பரிவர்த்தனைத் திட்டம் பலராலும் மிக சிலாக்கியமானதாகக் கருதப்பட்டது.

**கூர்நுதிக் கோபுரமும் தலைகீழ்க் கூர்நுதிக் கோபுரமும் (pyramiding and depyramiding)**

வேறுவகைப் பொன் திட்டங்களில் இல்லாத குறைபாடு ஒன்றுப் பொன் பரிவர்த்தனைத் திட்டத்தில் உள்ளது. இரண்டு அல்லது இரண்டுக்கு மேற்பட்ட நாடுகளின் பண முறைகள் (monetary systems) ஒரு தங்க இருப்பின் (gold reserve) அடிப்படையின்மீது, தலை கீழாகக் கட்டப்படும் கூர்நுதிக் கோபுரம்போல் அமைக்கப்படுகிறது. சர்வதேசக் கண்ணோட்டத்துடன் பார்த்தால், தங்கம் சிக்கனப்படுத்தப்படுகிறது பொய் யென விளங்கும். இம் முறையின்கீழ் பொன் நாணயம், பொன் கட்டி, பொன் பரிவர்த்தனைத் திட்டங்களை அநு சரிக்கும் நாடுகளுக்கு ஒரு குறிப்பிட்ட அளவுப் பொன் கிடைக்கும். (உ-ம்.) 'அ' என்ற நாடு ஐந்து மில்லியன் டாலர் பெறுமானமுள்ள பொன்னைக் கையிருப்பாக வைத் திருப்பதாகக் கொள்வோம். அந்நாட்டில் உள்ள காகித நோட்டுகள், துணை நாணயங்கள் (subsidiary coins), பாங்கு டிமாண்டு டிபாஸிட்டுகள் (bank demand deposits) இவை யாவும் இப்பொன் அடிப்படையைச் சார்ந்திருக் கின்றன. 'ஆ' என்ற நாடு பொன் பரிவர்த்தனைத் திட்டத்தைக் கையாளுவதாக வைத்துக் கொள்வோம். 'ஆ' ஒரு மில்லியன் டாலர் பெறுமானமுள்ள சாமான்களை 'அ'விற்கு விற்கிறதென்றும், அத்தொகையை 'அ' நாட்டுப் பாங்குகளில் டிபாஸிட்டுகளாகவோ, குறுகிய காலக் கடன் பத்திரங்களாகவோ (short-term securities) வைத்திருக்கிறதென்றும் கொள்வோம். 'அ'விலிருந்து பொன் வெளியேறுததால் அது தன் நாட்டில் செலா வணியிலிருக்கும் பணத்தைச் சுருக்க வேண்டிய காரண மில்லை. இருந்தாலும், 'ஆ' தனக்கு ஒரு மில்லியன்

டாலர் பெறுமானமுள்ள தங்கம் இருப்பதாக நினைத்து, அந்த அடிப்படையின் பேரில் பாங்கு நோட்டுகள், பாங்கு டிமாண்டு டிபாஸிட்டுகள் ஆகிய மேல் தளத்தைக் கட்டுகிறது. ஆகவே, நடைமுறையில் ஆறு மில்லியன் டாலர் பெறுமானமுள்ள தங்கம் இருப்பதாகத் தவருக, இரு நாடுகளும் எண்ணுகின்றன.

இத் தலைகீழ்க் கூர்நுதிக் கோபுரத்தின் புரைகள், இது இடிக்கப்படும் பொழுதுதான் உணரப்படுகிறது. சாதாரணமாக 'ஆ' நாடு தனது தங்க இருப்புக்காக (gold reserve) 'அ'வில் உள்ள டிபாஸிட்டுகளையும், குறுகிய காலக் கடன் பத்திரங்களையும் நம்பியிருந்தாலும், அதைப் பொன்னாக மாற்றி தன் நாட்டுக்குக் கொணர உரிமை இருப்பதாக எப்பொழுதும் எண்ணுகிறது. எப்பொழுதும் 'ஆ' நாட்டின் இராசதந்திரிகள் தங்கள் நிலைமை பத்திரமானதல்ல என்பதை உணர்ந்து, 'அ' நாட்டில் நடக்கும் விவகாரங்களை உன்னிப்பாகக் கவனித்து, 'அ'வில் நிலைமை மோசமானல் நடவடிக்கை எடுக்கத் தயாராயிருக்கின்றனர். 'அ'வில் பொருளியல் நெருக்கடி ஏற்படுவதாக வைத்துக் கொள்வோம். உடனே 'ஆ' தன் டிபாஸிட்டுகளையும், முதலீடுகளையும் பொன்னாக மாற்றி, அதை வேறொரு நாட்டுக்கோ அல்லது தன் நாட்டுக்கோ எடுத்துச் செல்ல முற்படும். அதனால் 'அ' தன் கையிருப்பில் 4 மில்லியன் டாலர் பெறுமானமுள்ள தங்கம்தான் இருக்கிறது என்பதை உணரும். அது "விளையாட்டின் விதிகளை" (rules of the game) அநுசரிக்க நினைத்தால் தன் நாட்டில் உள்ள பணச்செலாவணியைக் குறைக்க வேண்டும். அம்முறையைக் கையாள்வதால் விரும்பத்தகாத விளைவுகள் ஏற்படுமென்று நினைத்தால், பொன் திட்டத்தை தற்காலிகமாக ரத்துச் செய்து (suspend) 'ஆ' நாடு பொன்னை எடுக்காதபடி

தடுக்க வேண்டும். இம்முறையாலும் விபரீத விளைவுகள் ஏற்படலாம். ஆதலால் இவ்வாறான நிலையில், இப்பிரச்சினையை இருபாலாருக்கும் உகந்த முறையில் தீர்க்க முடியாது.

### (ஈ) பொன்னிருப்புத் திட்டம்

*1936*-ம் ஆண்டு செப்டம்பர் திங்களிலிருந்து இரண்டாம் உலகப்போர் தொடங்கும் வரை பெல்ஜியம், பிரான்ஸ், பிரிட்டன், உலாந்தா (Holland) ஸ்விட்ஸர்லந்து, அமெரிக்கா முதலிய ஆறு நாடுகளிடை ஒரு உடன்பாடு நிலவியது. * அதன்படி தங்கம் ஒரு நாட்டிலிருந்து இன்னொரு நாட்டிற்குத் தாராளமாகப் போகலாம். மேற்கூறிய மூவகைத் திட்டங்களில் ஒருவகைப் பொன் திட்டத்தையும் இந்நாடுகள் அநுசரிக்கவில்லை. இத் தங்கப் பரிமாற்றம் மத்திய பாங்குகள் மூலம் நடைபெறவில்லை. பரிவர்த்தனையைச் சமன்செய்யும் நிதிகள் அல்லது கணக்குகள் (Exchange Equalisation Funds or Accounts) மூலம் இத் தங்கப் போக்குவரத்து நடந்தது. இந்நிதிகள் கருவூலங்களின் (treasuries) பகுதிகளாக விளங்கின. இந்நிதிகளுக்கும், மத்திய பாங்குகளுக்கும் சுமுகமான உறவு இருந்தது. ஒவ்வொரு நிதியும் ஏராளமாகத் தன் நாட்டுச் செலாவணியை வைத்திருந்தது. இதன்மூலம் பிற நாட்டுச் செலாவணிகளையும், தங்கத்தையும் வாங்க முடியும். வேண்டியபோது பிற நாட்டுச் செலாவணிச் சந்தையில் (foreign exchange market) தலையிட இந்நிதி துணை செய்தது. உதாரணமாக லண்டனில் டாலர்கள் கிராக்கி என்றால், பிரிட்டிஷ் நிதி, டாலரை விற்கும். இல்லாவிடில் டாலரின் மதிப்பு ஏறும். அதேபோல்

---

* இவ்வுடன் பாட்டுக்கு முக்கூட்டுப் பண உடன்பாடு (Tripartite Moneytary Agreement) என்று பெயர். இது 1936 செப்டம்பரில் கையெழுத்தாகியது. முதலில் கையெழுத்திட்ட நாடுகள் பிரிட்டன், பிரான்ஸ், அமெரிக்கா இம்மூன்றுமே. பின்னர் நவம்பரில் பெல்ஜியம், உலாந்தா, ஸ்விட்ஸர்லந்து என்ற நாடுகளும் கையெழுத்திட்டன.

பாரிஸ்ஸில் பிராங்குகளுக்குக் கிராக்கி என்றால், பிரஞ்சு நிதி அவற்றை விற்கும். இவ்வாறு அந்நிய நாட்டுச் செலாவணிகளின் பரிவர்த்தனை விதங்கள் (rates of foreign exchange) ஒரே நிலையில் இருக்கும்.

இம்முறை இந்த ஆறு செலாவணிகளில் மட்டும் இந் நிதிகள் பரிவர்த்தனை செய்யுமளவுதான் நீடிக்கும். இதற்கு 1936-ம் ஆண்டு உடன்பாடு வகை செய்தது. எடுத்துக்காட்டாகப் பல பிற நிதிகள் தங்கள் கைவசம் இருக்கும் ஸ்டர்லிங் மிதமிஞ்சியிருக்கிறது என்று நினைத் தால், அதைக் கொடுத்துவிட்டு அதற்குப் பிரதியாகத் தங்கத்தைப் பிரிட்டிஷ் நிதியிடம் கேட்கலாம். அத் தங்கத்தைப் பெறுவோர் அதைத் தங்கள் கைவசமே வைத்திருக்கலாம்; அல்லது அதைக் கொடுத்துத் தங்க ளுக்கு வேண்டும் செலாவணியைப் பெறலாம். ஆனால் பிரிட்டிஷ் நிதி தன் கைவசமுள்ள தங்கம் பூராவும், கரையுமட்டும் வாளாவிராது, நீடித்து ஸ்டர்லிங்குக்குப் பதிலாகப் பொன்னை வேண்டினால் ஸ்டர்லிங்குக்கு அமித மதிப்பு (over-value) இருப்பதாகத்தான் கருத வேண்டும். அங்ஙன்மாகில், ஸ்டர்லிங் வாங்குவதை எல்லா நிதிகளும் நிறுத்திவைக்கத் தமக்குள் ஒப்பந்தம் செய்து கொள்ளும். அதனால் ஸ்டர்லிங்கின் மதிப்புத் தாழும். இவ் வாறு சுமுகமான முறையில் மாறுதல் ஏற்பட எல்லா நிதி களும் சிலசமயம் ஸ்டர்லிங்கை வாங்கும்; எல்லா நிதிகளும் சிலசமயம் ஸ்டர்லிங்கை விற்கும். தாம் ஒப்புக் கொண்ட புதுப் பரிவர்த்தனை விதத்தை ஸ்டர்லிங் அடைந்ததும், மீண்டும் அந்நிதிகள், கிராக்கிக்கு ஏற்றபடி ஸ்டர்லிங்கை வரம்பின்றி வாங்கும்; விற்கும்.

வட்டி விதத்தில் அதிக மாறுதல்கள் இல்லாமலும், அந்நாடுகளின் உள் நாட்டுப் பொருளியல்களைப் பெருத்த அளவில் பாதிக்கும் எந்த நடவடிக்கையையும் மேற்

கொள்ளாமலும், மேலே சொன்ன முறைகள் மூலம் பரிவர்த்தனை வீதங்களில் அதிக அளவு ஸ்திரம் (maximum stability) ஏற்பட்டது.

முன்னைய பொன் திட்ட வகைகளைப் (earlier types of gold standard) போன்று, பரிவர்த்தனை வீதங்களை 1%க்குமேல் மாருமல் இப் பொன் இருப்பு நிதி (Gold Reserve Fund) யினுல் வைக்க முடியாவிட்டாலும், சின்னுட்களுக்குள் பரிவர்த்தனை வீதங்களில் 5%, 10% அல்லது 20% மாறுதல் ஏற்படுவது தவிர்க்கப்பட்டது.

இம்முறைகள் நடப்பில் இருந்தபொழுது, பொன்னின் விலை எல்லாச் செலாவணிகளிலும் திட்ட வட்டமாக நிர்ணயிக்கப்படவில்லை. இதனுலும் இம்முறை அதிர்ச்சிகளைத் தாங்குவதற்கு ஏற்றதாக இருந்தது.

இந்நிதிகள் யாவும் ரகசியமாக வேலை செய்தன. இந்நிதிகள் எச் செலாவணிகளை வாங்குகின்றன, தங்கள் மூலதனத்தை (resources) எவ்வடிவில் வைத்திருக்கின்றன என்பதை பணச் சந்தைகள் (money markets) அறியா. அவைகளின் கட்டுப்பாட்டுக் கொள்கையும் (policy of the controls) பகிரங்கமாக்கப்படவில்லை. சிலர் இம் மூடு மந்திரத்தை வெறுத்தாலும் இம் மர்மமே இம்முறைத் திறம்பட நடப்பதற்குத் துணை செய்தது. இம்முறை நன்ருகத் தொழிற்பட்டது என்றே இயம்பலாம். ஆனல் போரினுல் ஏற்பட்ட நெருக்கடிகளை இம்முறையாலும் சமாளிக்க முடியாததால், இரண்டாம் உலகப் போரின் போது பரிவர்த்தனைகள் (exchanges) நேரடியாகக் கட்டுப்பாடு செய்யப்பட்டன. போரின்போது இயற்றப்பட்ட எண்ணற்ற விதிகள் இன்னும் நீங்கியபாடில்லை.

## பொன் திட்டத்தின் அநுகூலங்கள்

அ) அது சர்வதேச மதிப்புத் திட்டம் (international standard of value) ஒன்றை அளிக்கிறது. ஆ) அதன்

இயக்கம் கட்சி ஆட்சியைச் சாராதது. அதனுல் சரியான பணக்கொள்கை (sound monetary policy)யைப் பின் பற்றுவது இன்றியமையாததாகிறது. இ) அதில் ரகசிய மாகக் குறுக்கிட முடியாது; ஏனெனில், தங்கத்தின் மதிப்பில் உலகம் பூராவும் அக்கரை கொண்டுள்ளது. ஈ) அது கடன் விரிவைக் (credit expansion) கட்டுப்படுத்த சிறந்த முறை. ஏனெனில், பணத்தின் அளவு கையிருப்புப் பொன்னைப் பொறுத்திருக்கிறது. உ) அது ஒழுங்கற்ற (slovenly) பண முறைகளை, ஓரளவு நல்ல முறையில் வைத்திருக்க உதவுகிறது. ஊ) நீண்ட காலத்துக்குப் பொன்னின் வாங்கும் சக்தி மாருமல் ஒரே படியாயிருக் கிறது.

## பொன் திட்டத்தின் பிரதிகூலங்கள்

அ) மிகப் பண நெருக்கடியான காலங்களில் முரிந்து போவதால் இதை 'நல்ல கால'த் திட்டம் (fair weather standard) எனலாம். ஆ) கடன் பெருக்கம் (credit expansion) பொன்னின் அளவைப் பொறுத்திருக்கிறதே ஒழியப் பொருளியல் வியாபாரத் தேவைகளைப் பொறுத் தில்லை. இ) தொழில் அல்லது வாணிக நிலையுடன் யாதொரு தொடர்புமின்றி ஏற்படும் தங்க இயக்கங் களினுல் (gold movements) ஒரு நாட்டின் கையிருப்புத் தங்கம் கரையவோ, கூடவோ ஏதுவாகும்.

## சர்வதேசப் பொன் திட்டத்திற்கு வேண்டப்படுபவை
(Requisites of the International Gold Standard)

அ) பல நாடுகள், குறிப்பாகப் பெரும் நாடுகள், இதை அநுசரிக்க வேண்டும். ஆ) ஒவ்வொரு நாட்டுக்கும் போதியத் தங்கம் கிடைக்கும்படிச் செய்யவேண்டும். இ) பிற நாட்டு வாணிகத்தில் ஓரளவு சுதந்திரம் இருக்க வேண்டும். ஈ) பெரும் சர்வதேசக் கடனைத் தவிர்க்க

வேண்டும். உ) பொன் திட்டம் நிலவும் நாடுகளின் உள் நாட்டுப் பொருளியல்கள் ஓரளவு 'விடக்கட்டதாக' இருக்கவேண்டும். ஊ) ஒவ்வொரு நாட்டிலும் ஓரளவு நிலையான அரசியல் இருக்கவேண்டும்.

**பொன் திட்டத்தின் முரிவு**
(Breakdown of the Gold Standard)

**பிரிட்டனும் சர்வதேசப் பொன் திட்டமும் :** அ) பிரிட்டனில் 1816-லிருந்து 1914 வரை பொன் திட்டம் நிலவியது. ஆ) போர்க்கோளாறுகளால் 1914-ல் பொன் திட்டம் தற்காலிகமாக ரத்துச் செய்யப்பட்டது. இ) 1925-ல் சில திருத்தங்களுடன் மீண்டும் புகுத்தப்பட்டது. ஆனால் உள் நாட்டில் பொன் நாணயங்கள் செலாவணியில் இல்லை. தங்கத்தைக் கட்டியாக ஏற்றுமதி, இறக்குமதி செய்யத் தாராளமாக அநுமதிக்கப்பட்டது. 1928-ல் மீண்டும் பல நாடுகள் பொன் திட்டத்தைக் கையாண்டன. ஈ) 1931-ல் பொன் திட்டத்தைப் பிரிட்டன் கைவிட்டது. பிரிட்டனைத் தொடர்ந்து சுமார் நாற்பது நாடுகள் பொன் திட்டத்தைக் கைவிட்டன. உடனடியாக ஸ்டர்லிங்கின் மதிப்பு வீழ்ந்தது. அதிலிருந்து பிரிட்டன் நிர்வகிக்கப்பட்ட செலாவணி (managed currency) முறையைப் பின்பற்றியது. இதை இங்கிலாந்து பாங்கு (Bank of England), கருவூலத்துடன் சேர்ந்து நடத்தியது. உ) பொன் திட்டத்தைக் கைவிட்டபின் மூன்று வெவ்வேறுபட்ட கோஷ்டிகள் (groups or blocs) தோன்றின. அவையாவன : க) ஸ்டர்லிங் பிரதேசம் அல்லது கோஷ்டி (ஸ்கான்டிநேவியன் நாடுகள், சிறிய பால்டிக் நாடுகள், எகிப்து, இராக்.) உ) டாலர் பிரதேசம் (லத்தீன் அமெரிக்க நாடுகள்.), ங) தங்கப் பிரதேசம் அல்லது கோஷ்டி (பிரான்ஸ், ஸ்விட்ஸர்லந்து, பெல்ஜியம், உலாந்தா). இதனுல் சர்வதேச வியாபாரம் ஒவ்வொரு

பிரதேச எல்லைக்குள் சுருங்கியது. 1936–ல் தங்கக்கோஷ்டி முரிந்தது. ஊ) உள்நாட்டு நிதி, வர்த்தகத் தொந்தரவுகளால் 1933–ல் அமெரிக்க ஐக்கிய நாடுகள் டாலர் மதிப்பைக் குறைத்தது. எ) தங்கள் கூட்டு முயற்சியால் பரிவர்த்தனை விதங்கள் ஒரேபடியாயிருக்க அமெரிக்கா, பிரிட்டன், பிரான்ஸ் ஆகிய மூன்று நாடுகளும் ஒப்பந்தம் செய்துகொண்டன. ஏ) 1939–ல் போர் முரசு கொட்டியதும் ஸ்டர்லிங்கின் மதிப்பு டாலரைவிடக் குறைய ஆரம்பித்தது. ஸ்டர்லிங் பிரதேசத்தின் டாலர் இருப்புகளை (resources)க் கெட்டிப்படுத்த (conserve) நடவடிக்கைகள் மேற்கொள்ளப்பட்டன. இதன் விளைவுகள்: க) ஸ்டர்லிங் இப்பிரதேசத்தின் பொது சர்வதேச செலாவணி (common international currency)யாக ஆயிற்று. உ) பிரிட்டன் ஸ்டர்லிங்கைக் கொண்டு இப்பிரதேசத்தில் ஏராளமாகப் போருக்கு வேண்டிய சாமான்களை வாங்கத் துணை செய்தது. ங) ஸ்டர்லிங் பிரதேச நாடுகளின் டாலர், பொன் இருப்புகளைச் சேகரித்து ஒரு பொது நிதியாக (common pool) வைத்து, அதைப் போர்த் தேவைகளுக்குமட்டும் உபயோகப்படுத்தியது. ச) ஸ்டர்லிங் பிரதேசத்திற்குப் புறம்பான நாடுகளிலிருந்து இன்றியமையாத பொருள்களை வாங்க இந்நிதி துணை செய்தது. ரு) இதன் மூலம் பிரிட்டனின் ஸ்டர்லிங் வாடிக்கைக்காரர்களிடம் ஏராளமான ஸ்டர்லிங் சேர்ந்தது.

## பொன் திட்டம் முரிவுக்கான காரணங்கள்

### க) பிற நாட்டு வாணிகத்துக்கு முட்டுக் கட்டைகள்

முதல் உலகப்போரின் விளைவாகப் பல நாடுகளில் தேசிய உணர்ச்சி தோன்றியது. சர்வதேச நலனுக்கன்றித் தன்னலத்துக்கான கொள்கைகளை பல நாடுகள் கடைப்பிடித்தன. பிரிட்டன் நிதி விவகாரத்தில் தன் தலைமைப் பீடத்தை இழந்தது. தன்னலத்தால் உந்தப்பட்டு

பிரிட்டன் தன் சுயேச்சை வாணிகக் கொள்கையை (free trade policy)க் கைவிட்டது. சாம்ராஜ்ய நாடுக (empire countries)ளுடன் வியாபாரத்தைப் பெருக்கவும், பிற நாடுகளுடன் வியாபாரத்தைக் குறைக்கவும் நடவடிக்கை எடுத்துக் கொண்டது. அமெரிக்க ஐக்கிய நாடுகள் போன்றவை இறக்குமதி வரிகளை உயர்த்தின. சில நாடுகள் இறக்குமதிக்குப் பூரணத்தடை விதித்தன; சில ஏற்று மதிக்கு மானியங்கள் (subsidies) அளித்தன. பல நாடுகள் பண்டமாற்று ஒப்பந்தங்கள் (barter agreements) செய்து கொண்டன. இவ்வாணிக முட்டுக்கட்டைகளால், பல் வேறுபட்ட நாடுகளிடையே விலைவாசிகளில் இட்டோட்டம் ஏற்பட்டது. இவ்விட்டோட்டத்தைத் தங்க இயக்கங்களால் ஈடுகட்ட முடியவில்லை. ஒரு நாட்டில் விலைவாசிகள் மலிவாயிருந்தாலும், அதனால் பிற நாட்டு மக்களுக்குப் பயனில்லாது போயிற்று.

### உ) தங்கம் சமமாகப் பகுக்கப்படாமை (Maldistribution of Gold)

போரினாலும், போருக்குப் பின்னர் நேர்ந்த மாறுதல்களாலும், அமெரிக்க ஐக்கிய நாடுகள், பிரான்ஸ் இவற்றில் தங்கம் குவியவும், ஜெர்மனி, ஆஸ்திரியா போன்ற நாடுகளில் தங்கம் கரையவும் நேர்ந்தது. அரசாங்க அதிகாரிகளும், மத்திய பாங்குகளின் உத்தியோகஸ்தர்களும் உபரியாக அல்லது பற்றுக் குறையாகத் தங்கம் இருப்பின் அதனால் ஏற்படும் விபரீத விளைவுகளுக்கு அஞ்சி பல முன் நடவடிக்கைகளை மேற் கொண்டனர். இதனால் "விளையாட்டின் விதிகள்" சகஜமாக மீறப்பட்டன. இதனால், விலைவாசி தாரதம்மியத்தால், தங்கம் மீண்டும் நாடுகளிடைப் புனர் வினியோகம் செய்யப்படுவது தவிர்க்கப்பட்டது.

### ங) விலைவாசிகள் மாருமை
("Stickiness" of Prices)

தன் கைவசம் இருக்கும் தங்க இருப்பின் அளவுக்கு ஏற்ப விலைவாசிகள் மாறுவது பெரிய இணைக்கப்பட்ட கம்பெனிகள் (great consolidated corporations), பல துணைக் கம்பெனிகளை நிர்வகித்த ஹோல்டிங் கம்பெனிகள் (holding companies), வர்த்தகச் சங்கங்கள், தொழிலாளர் சங்கங்கள் மூலம் தடுக்கப்பட்டதுமன்னியில், அவை விலை, கூலி இவற்றில் வெட்டை எதிர்த்தும், அவற்றில் உயர்வுக்காகவும் போராடின. இக்கம்பெனிகள் உலகின் பல பகுதிகளில் சாமான்கள் வினியோகத்தையும், சில சாமான்களின் விலைகளையும் தம் கைக்குள் வைத்திருந்தன.

### ச) பொன் பரிவர்த்தனைத் திட்டத்தை உபயோகப்படுத்தியது
(Use of the Gold Exchange Standard)

பல நாடுகள் பொன் பரிவர்த்தனைத் திட்டத்தை நிறுவியதும் சர்வதேசப் பொன் திட்டத்திற்கு ஒரு பலவீனமாயிருந்தது. ஏனெனில், இதனுல் தங்க இயக்கங்கள் தவிர்க்கப்பட்டு, பல நாடுகளிடை விலைவாசிகள் சமநிலை எய்துவதும் தவிர்க்கப்பட்டது.

### ரு) சர்வ தேசக் கடன்
(International Indebtedness)

ஜெர்மன் நஷ்ட ஈடு (reparations), போர்க்கடன்கள் (war debts), சர்வதேசக் கடன் கொடுத்தல் (international lending) இவையாவும் போருக்குப்பின், பொன் திட்டம் இலகுவாக இயங்குவதைத் தடைசெய்தன. நஷ்டஈடு கொடுப்பதற்கும் போர்க் கடன்களைத் திருப்பித்தருதற்கும் தங்கம் ஒரு நாட்டைவிட்டு இன்னெரு நாட்டுக்குச் செல்ல வேண்டியிருந்தது. இத்தங்க இயக்கங்களுக்கும்,

வாணிகத்திற்கும், விலைவாசிகளுக்கும் யாதொரு தொடர்புமின்றி இருந்தது. அதனால் ஏற்கனவே அளவுக்கு மிஞ்சி தங்கம் குவிந்திருந்த அமெரிக்க ஐக்கிய நாடுகளில் பின்னும் தங்கம் குவிந்தது. ஏற்கனவே தங்கம் குறைச்சலாக உள்ள நாடுகள் பின்னும் தங்கத்தை இழந்தன. இவற்றின் விபரீத விளைவுகள், அமெரிக்க ஐக்கிய நாட்டு முதலாளிகள் ஜெர்மனிக்குக் கடன் கொடுக்க இசைந்ததால், சிறிது காலம் ஒத்தி வைக்கப்பட்டன. அமெரிக்க ஐக்கிய நாடுகள் ஜெர்மனிக்குக் கடன் கொடுக்க, அதைக்கொண்டு ஜெர்மனி நேச நாடுகளுக்கு நஷ்ட ஈடு கொடுக்க, நேச நாடுகள் அதைக் கொண்டு அமெரிக்க ஐக்கிய நாடுகளுக்குப் போர்க் கடன்களைத் திருப்பித் தந்தன.

லத்தீன் அமெரிக்க (Latin America) நாடுகளுக்குப் பெருவாரியான கடன் கொடுத்ததும் இக்கட்டில் முடிந்தது. அக்கடன்கள் அரசாங்கங்களுக்குக் கொடுக்கப்பட்ட கடன்கள்; தொழிற்றுறைகளுக்குக் கொடுக்கப்பட்ட கடன்கள் அல்ல. இக்கடன்களினால் வருமானம் பெருகாததாலும், பண்டங்களை இறக்குமதி செய்ய அமெரிக்க ஐக்கிய நாடுகள், பல தடைகளை விதித்ததாலும், கடன்களைத் திருப்பித் தரமுடியாது இந்நாடுகள் திண்டாடின.

### ரூ) அரசியலில் நிலையற்ற தன்மை (Political Instability)

இறுதியாக, போருக்குப்பின் ஏற்பட்ட அரசியல் நெருக்கடியால் பல நாடுகளில் பொன் திட்டம் தகர்ந்தது. போர் வதந்திகள், உள் நாட்டுப் பூசல்கள், அரசியல் கிளர்ச்சிகள் முதலியன பண முறைகளைப் பாதித்தன. பீதியினால் பணம் நாட்டைவிட்டு நாட்டுக்குப் ஓட்டம் பிடித்தது. உள்நாட்டு நிலவரம் சரியில்லாதபொழுது

தனிப்பட்டவர்கள், பாங்குகள், ஸ்தாபனங்கள் (Corporations), இவை தங்கள் சொத்துக்களை விற்றுப் பிற நாட்டுப் பாங்குகளில் கணக்கு வைத்துக்கொண்டு தங்களைப் பாதுகாத்துக்கொண்டன. அந் நாடுகளில் நிலைமை மோசமானால் அவ் டிபாசிட்டுகள் திரும்ப எடுக்கப்பட்டுப் பிற நாடுகளுக்கு அனுப்பப்பட்டன. 1920, 1930 வாக்கில் இங்ஙனம் நெருக்கடி நேரிட்ட பொழுதெல்லாம் பணம் ஒரு நாட்டிலிருந்து இன்னொரு நாட்டிற்குச் 'சிட்டாய்ப்' பறந்தது.

**நிர்வகிக்கப்பட்ட பணம் (Managed Money)**

ஒரு குறிப்பிட்ட திட்டப்படி மத்திய பாங்குகளால் பண மதிப்பு நிர்வகிக்கப்பட்டால் அம்முறைக்கு நிர்வகிக்கப்பட்ட பணமுறை என்று பெயர். தற்பொழுது எல்லா நாடுகளிலும் நிர்வகிக்கப்பட்ட பண முறைகளே நிலவுகின்றன. இப்பொழுது பல நாடுகளிலும் நாணயமாக மாற்ற முடியாத காகிதப் பணமே (inconvertible paper money) நிலவுகிறது. இம் முறையை ஆதரிப்போர் பொன் திட்டத்தில் காணப்படும் புரைகள் இதில் இல்லையெனப் புகல்கின்றனர். இம்முறையில், போதியத் தங்கம் இல்லையே என்ற கவலையின்றி, மத்திய பாங்குகள் விலைவாசிகள் இயக்கத்தை (price movements) நிர்வகிக்கலாம். விலை வாசிகளை மாறுமல் வைத்திருக்க விரும்பினால் அது மத்திய பாங்கினால் இயலும். இம்முறையால், தன்னிச்சைப் படிக் காரியங்களை நடத்த ஒவ்வொரு நாட்டுக்கும் போதிய சுயேச்சையிருக்கும். பிற நாடுகளுடன் ஒத்துழைக்க வேண்டிய கட்டாயமும் இல்லை.

இங்ஙனமாகப் பண விஷயங்களில் போதிய சுயேச்சையுடன் இருக்க இம்முறை துணை செய்தாலும், இதிலுள்ள பெருத்த குறைபாடு பரிவர்த்தனை வீதங்கள் அடிக்கடி மாறிக்கொண்டிருப்பதே. இதனால் சுமுகமான சர்வதேச

வியாபாரமும், முதலீடும் (investment) பாதிக்கப்படும். மிக அதிகமாக வெளியிடப்பட்டு அதனுல் பணத்தின் மதிப்பு மிகவும் தாழக்கூடும்.

ஆனுல் இக் குற்றச் சாட்டுகள் ஒன்றும் அண்மைய அநுபவத்திஞல் நிரூபிக்கப்படவில்லை. *1931–36*க்கு இடைப்பட்ட ஆண்டுகளில், பிரான்ஸ்பொன் திட்டத்தை அநுசரித்தாலும், அதில் விலைகள் அதிகம் மாறியும், இங்கிலாந்து காகிதத் திட்டத்தை அநுசரித்தாலும் அங்கு விலைவாசிகள் சீராகவும் இருந்தன. பரிவர்த்தனை வீதங்களில் பெருத்த மாறுதல்கள் ஏற்படாவண்ணம், பரிவர்த்தனைச் சமநிலை நிதிகளால் (**Exchange Equalisation Funds**) தவிர்க்கலாம்.

# ஆறும் அதிகாரம்

## பாங்குகள் (Banks)

நாம் இப்பொழுது பாங்கிங் (banking) என்று சொல்லும் முறை அண்மைக் காலத்தில் தோன்றியது; மூன்று அல்லது நான்கு நூற்ருண்டுகளுக்கு முற்படாதது. ஆனுல் கொடுக்கல் வாங்கல் (லேவாதேவி) முறை மிகப் பழங்காலத்திலிருந்து வருகிறது. ஏசு பிறப்பதற்கு முன் ஏழாம் நூற்ருண்டில் பாங்கு முறை நிலவியதாக மிகப் பழைய சான்றுகள் கூறுகின்றன. எடுத்துக்காட்டாகப் பாபிலோனில் எஜிபி அண்டு கோ (Egibi & Co) என்ற பாங்கிங் கம்பெனி, சென்னசரிப் (Sennacherib) என்பவரின் ஆட்சிக் காலத்தில் (சுமார் கி. மு. 700) தோன்றி நூற்றைம்பது ஆண்டுகள் நிலவியது. இந்தியாவில் கி. மு. ஐந்தாம் நூற்ருண்டிலிருந்து பாங்கு முறை நிலவியதாகத் தெரிகிறது. 'பாங்கு' என்பதற்குச் சரியான விளக்கம் தர முடியாதாஞலும், ரெய்மாண்ட் பி. கெண்ட் (Raymond P. Kent) கூறுமாறு "சும்மாத் தேங்கிக் கிடக்கும் பணத்தை தற்காலிகமாக பொது நன்மைக்காகச் சேர்த்துப் பிறர் செலவுக்குக் கொடுக்கும் நிலையம் பாங்கு" எனலாம்.

### வாணிக பாங்குகளின் அலுவல்கள்
### (Functions of the Commercial Banks)

அ) மக்களிடம் வறிதே தேங்கிக்கிடக்கும் பணத்தைப் பாங்குகள் சேமித்து வைக்கின்றன. பாங்குகள் இல்லையெனில், தனிப்பட்டவர்கள், ஸ்தாபனங்கள் சேர்த்துவைக்கும் பணம் பிறருக்குச் சுழுவில் கிடைக்க வழியில்லை. பணம் போட்டு வைப்பவர்களையும், பணம் வாங்குபவர்களையும் ஒன்று கூட்டும் நிலையம் பாங்கு.

ஆ) பாங்குகள் "நாணயத்தைப் பணமாக்குகின்றன" (monetize credit). டிமாண்டு டிபாசிட்டுகளைப் படைப்பதன் மூலம், பாங்குகள் மக்களுக்குக் கடன் கொடுக்கின்றன. வர்த்தகப் பாங்குகள் தனிப்பட்டவர்கள் வாக்குறுதிகளுக்குப் (Individual promises) பிரதியாகத் தங்கள் வாக்குறுதிகளைக் கொடுக்கின்றன. ஒரு வியாபாரி கஷ்டத்தில் இருக்கலாம்; அவனைப் பிறர் அறியாததால் நம்பிக் கடன் கொடுக்க முன்வராமல் இருக்கலாம். அவன் "நாணயஸ்தன்" என்பதை பாங்கு நம்பினால், அவனுக்குப் பணம் கொடுக்கலாம்.

இ) இந்தப் பாங்குகள் "ஏற்புடைத்தான வகைப் பணத்தை"ப் (convenient kind of money) படைக்கின்றன. சிறு துண்டுக் காகிதங்களைப் பரிமாறுவதன் மூலம் எவ்வளவு பெரிய தொகையையும், பாங்குகள் இன்னொருவர் பேருக்குச் சுலபமாக மாற்றுகின்றன. அவர்கள் பக்கத்து ஊரில் இருந்தாலும், பல ஆயிரம் மைல்களுக்கு அப்பால் இருந்தாலும், பணம் சுளுவில் அவர்களிடம் போய்ச் சேருகிறது. நேரில் பெருந் தொகையைக் கொண்டு கொடுப்பதில் அதிகச் செலவும், அபாயமும், சிரமமும் இருக்கின்றன. இவற்றையெல்லாம்கவனித்தால் டிமாண்டு டிபாசிட்டு கணக்குகளின் ஈடில்லாத சௌகரியம் புலனாகும்.

ஈ) பொதுமக்கள் சேமித்து வைக்கும் தொகைகளைப் பாங்குகள் கண்காணித்து அவர்களுக்கு உதவுகின்றன. தன்னிடம் தேவைக்கு மேல் பணத்தை வைத்துக் கொள்ளத் தனிப்பட்டவர்கள் அஞ்சுகின்றனர். காரணம் அவை களவு போகலாம் அல்லது காணாமற் போகலாம் என்பதே. பாங்குகள் அவற்றைப் பத்திரமாக வைத்திருந்து, வேண்டும்போது கொடுத்துதவுகின்றன.

மேலும் இவற்றைத் தவிர்த்து வேறு பல அலுவல்

களையும் பாங்குகள் மேற்கொள்கின்றன. இவ்வலுவல்கள் மூவகைப்படும். அ) பிற நாட்டு வாணிகத்துக்கு வேண்டும் நிதி கொடுத்தும், காரியக்காரன் பணிகள் (agency services), பொதுநலப் பணிகள் (general utility services) செய்தும் பாங்குகள் உதவுகின்றன. ஆ) தங்கள் வாடிக்கைக்காரர்களின் காரியக்காரராக இருந்து செக்குகள் (cheques), சீட்டுகள் (bills), டிவிடண்டுகள், உறுதித் தொகைகள் (insurance premia), இவற்றைச் சேகரித்தும், பட்டுவாடா செய்தும் உதவுகின்றன. இ) வேறு பலதிறப்பட்ட பணிகளும் அவை புரிகின்றன. வட்டி, டிவிடண்டுகள் சேகரித்தும், தர்மகர்த்தர்களாக நடந்தும், உயில்களை நிறைவேற்றியும், குடும்ப டிரஸ்டுகளை நிர்வகித்தும், பலவகைக் கடன் கருவிகளை (credit instruments) வெளியிட்டும் வருகின்றன. கடன் கருவிகளுக்கு உதாரணங்கள் கடன் கடிதங்கள் (letters of credit), பிரயாணிகளின் செக்குகள் (traveller's cheques), முதலியன.

**பணப் படைப்பு** (Creation of Money)

பாங்குகள் பணத்தைப் பட்டுவாடாமட்டும் செய்யவில்லை; பணத்தைப் படைக்கின்றன. மிக முன்னேற்றம் அடைந்த பல நாடுகளிலும் பணத்தில் பெரும்பகுதி பாங்குகளினுல் படைக்கப்படுகின்றது. இதைப் பாங்குப் பணம் என்று நுவலலாம். ஒரு தனிப்பட்டவருக்கு அல்லது ஸ்தாபனத்திற்குப் (corporation) பாங்கு கொடுக்கும் கடனே பாங்கு டிபாசிட்டு எனப்படுகிறது. அடுத்து எதனுல் மக்களுக்குப் பாங்குகள் கடன்படுகின்றன என்ற கேள்வி எழுகிறது. பாங்குகள் லாபத்தை நாடும் நிலையங்கள். சில உரிமைகளை (rights) மக்கள் பாங்குகளில் ஈடுவைக்கின்றனர். அதற்குப் பிரதியாகப் பாங்குகள் கடன் கொடுக்கின்றன, இக் கடன்களுக்கு

வரும் வட்டியிலிருந்தே பாங்குகள் தங்கள் வருமானத்தைப் பெறுகின்றன. சரியான முறையில் பாங்குகள் நிர்வகிக்கப்பட்டால் அவற்றின் ஆஸ்திகள் (assets) பொறுப்புகளுக்குச் (liabilities) சமமாகவே எப்பொழுதும் இருக்கும். பாங்குகளின் டிபாசிட்டுகள்—அதாவது மக்களுக்குப் பாங்கு கொடுக்கவேண்டிய கடன்களுக்குச் சமமாகப் பாங்குகளின் கடனாளிகள் கொடுக்கவேண்டிய தொகை இருக்கவேண்டும். பாத்தியதைகளைப் (claims) பரிவர்த்தனை செய்வதே பாங்கு டிபாசிட்டுகளைப் படைக்கும் முறை. பாங்கில் கடன் வாங்க விழையும் ஒருவர் பாங்கில் பணத்தைப் போட்டுவைத்தால் பாங்கு டிபாசிட்டு எனப்படும். அரசாங்கப் பத்திரம் (government bond), வாக்குறுதி (promise) இவைகளுக்குப் பதிலாகவும் பாங்கு டிபாசிட்டைப் படைக்கலாம். பாங்கு டிபாசிட்டு என்பது ஒருவகைப் புத்தகக் கடனே (book debt). இப் பாங்கு டிபாசிட்டுப் பணமாகப் பயன்படுகிறது. ஏனெனில், அதைப் பொது வாங்கும் சக்தியாகப் பயன்படுத்தலாம். ஆனால் எப்பொருளை ஈடாக வைத்தோமோ அதைப் பணமாகப் பயன்படுத்த முடியாது. இவ்வாறாக பாங்குகளினால் பண சப்ளை அதிகரிக்கிறது.

### பணம் படைப்பதில் பாங்கு அதிகாரத்தின் வரம்புகள்
### (Limitations on the Power of the Banks to create Credit)

ஒரு பாங்கு புத்தகக்கடனைப் படைப்பதன் மூலம் வட்டியைப் பெறலாமென்றால், ஏன் தன் விருப்பம்போல் பணத்தைப் படைத்து லாபத்தைப் பெறக்கூடாது என்ற கேள்வி எழுகிறது. (பாங்கு தன் கணக்குப் புத்தகத்தில் இன்னாருக்குத் தான் இவ்வளவு கொடுக்க வேண்டும் என்றெழுதிவைப்பதைத்தான் புத்தகக்கடன் என்கிறோம்.)

டிபாசிட்டுப் போட்டவர்கள் கேட்ட பொழுதில் பணத்தை ரொக்கமாகக் கொடுக்கவேண்டிய நிர்ப்பந்தம்

பாங்குகளுக்கிருக்கிறது. இஃது பாங்கின் பணம் படைக்கும் அதிகாரத்தை மட்டுப்படுத்துகிறது. எவ்வாறு எனில், பாங்குகள் தம் ரொக்க இருப்பு (Cash reserve) ஒரு குறிப்பிட்ட அளவுக்குக் குறையாமல் பார்த்துக் கொள்ளவேண்டும். எடுத்துக்காட்டாகப், பிரிட்டனில், டிபாசிட்டுகளில் 9 அல்லது 10% குறைந்த பக்ஷ ரொக்க இருப்பாக இருக்கவேண்டும். நூறு பவுன் டிபாசிட்டுகள் என்ருல், பத்துப் பவுனவது ரொக்கமாக இருக்கவேண்டும். ஆகவே ஒரு பாங்கு மேலும் மேலும் டிபாசிட்டுகளைப் படைத்துக்கொண்டு போனுல் ரொக்க இருப்பின் சத விகிதம் குறையும்.

ஒரு பாங்கு அதிகக் கடன் கொடுக்க விரும்பினுல் தன் மொத்த ரொக்க இருப்பை அதிகரிக்கவேண்டும்; அல்லது தான் பத்திரம் எனக்கருதிய குறைந்த பக்ஷ அளவுக்குக் குறைவான சத விகிதம் ரொக்க இருப்பு வைத்திருக்க உடன்படவேண்டும்.

பல கிளைகளுடன் கூடிய ஒரே ஒரு பாங்கு ஒரு நாட்டில் இருக்கிறதென்ருல், அது தன்னிச்சைப்படி நாட்டில் இருக்கும் ரொக்கத்தைக் கூட்டவும் முடியாது, குறைக்கவும் முடியாது. ஏனெனில் ரொக்கம் பூராவும், மத்திய பாங்கினுல் கட்டுப்பாடு செய்யப்படுகிறது. எந்த நேரத்திலும் ஒரு நாட்டில் இருக்கும் எல்லா ரொக்கமும், பாங்கு, மக்கள் இவர்களிடைப் பிரிக்கப்பட்டிருக்கிறது. மக்களைக் குறைவாக வைத்திருக்கும்படி நிர்ப்பந்தப் படுத்தி, தன் ரொக்க இருப்பை, நிரந்தரமாக ஒரு பாங்கால் கூட்டமுடியாது. தன்னிடமிருக்கும் கடன் பத்திரங்களை (securities) விற்று, தற்காலிகமாக ஒரு பாங்கு அதிக ரொக்கத்தைப் பெறலாம். அல்லது சில வாடிக்கைக்காரர்களைக் கடனை ரொக்கமாகத் திருப்பிக் கொடுக்கும்படிக் கேட்டுத் தன் ரொக்க இருப்பைக் கூட்டலாம்.

எனினும் அவ் ரொக்க அடிப்படையின்மீது பாங்கு புதிதாகக் கடன் கொடுக்க முடியாது. ஏனெனில், வேண்டிய போது வேண்டியமட்டும் டிபாசிட்டுகளை ரொக்கமாகத் திரும்பப் பெறும் உரிமை டிபாசிட்டர்களுக்கு இருக்கிறது. ஆகவே தன் கைவசம் இருக்கும் ரொக்கத்தின் சத விகிதம் முன்போலவே இருந்தாலும், அல்லது நாட்டிலுள்ள மொத்த ரொக்கத் தொகை அதிகரிக்கப்படாமல் இருந்தாலும், பாங்குகள் தம் ரொக்க இருப்பை நிரந்தரம் அதிகரித்துக்கொள்ள சக்தியற்றவையாக இருக்கின்றன.

இவ்வாறாக மொத்த பாங்கு டிபாசிட்டுகள் மூன்று விஷயங்களைப் பொறுத்திருக்கின்றன. அவையாவன : அ) ஒரு நாட்டில் இருக்கும் மொத்த ரொக்கத் தொகை, ஆ) மக்கள் தங்களிடம் வைத்துக்கொள்ள விரும்பும் ரொக்கத் தொகை, இ) பாங்குகள் பத்திரம் எனக்கருதும் குறைந்தபக்ஷ சதவிகித ரொக்கம். ஒரு பாங்குக்குப் பதில் பல பாங்குகள் இருப்பினும் இவ்வாதம் பொருந்தும்.

இதிலிருந்து பாங்கு முறையின் இரண்டு முக்கிய கொள்கைகள் புலனாகின்றன. ஒன்று வீதக்கொள்கை (the principle of ratios). சட்டப்படியோ, சம்பிரதாயப் படியோ, டிபாசிட்டுகளில் ஒரு விகிதத்தை ரொக்கமாக வைத்திருப்பதே வீதக்கொள்கை எனப்படும். இன்னொரு கொள்கை ஆஸ்திகளும், பொறுப்புகளும் சமம் என்பது. இக்கொள்கை பாங்குக்கு மட்டும் பிரத்தியேகமானதல்ல. எல்லா வர்த்தகக் கம்பெனிகளுக்கும் பொருந்தும்.

### பாங்கு நோட்டுகள் வெளியீடு

தற்கால பாங்கு வளர்ச்சியின் முற்கூற்றில், பாங்கு வளர்ச்சிக்கு நோட்டு வெளியீடு இன்றியமையாததெனக் கருதப்பட்டது. ஆனால் டிபாசிட்டுப் பாங்குகளின் துரித வளர்ச்சியும், வணிக சமுதாயம் டிபாசிட்டுக் கடன்களை

விழைந்ததும், நோட்டு வெளியீட்டை அவ்வளவு முக்கிய மற்றதாகச் செய்தது. முதலில் கட்டுப்பாடு ஏதுமின்றி நோட்டு வெளியிடப்பட்டது. பின்னர்க் கட்டுப்பாட்டின் அவசியத்தை உணர்ந்ததும், நோட்டுகள் வெளியீடு கட்டுப் படுத்தப்பட்டது. இக்கட்டுப்பாட்டுக்குக் காரணம், பாங்குகளிடைத் தாராளப் போட்டி விரும்பத்தகாததாக இருந்ததும், மாறுபட்ட பலதிறப்பட்ட நோட்டுகள் வெளி யிடப்பட்டதும் தான். தற்பொழுது, பல நாடுகளிலும் நோட்டு வெளியீடு மத்திய பாங்கின் ஏகபோக உரிமை யாக இருக்கிறது.

## நோட்டு வெளியீட்டுக் கட்டுப்பாடு

பத்தொன்பதாம் நூற்றுண்டின் இடைப்பகுதியில் ஆங்கிலச் செலாவணி திருப்திகரமான நிலையில் இல்லை. பல பாங்குகளும், வியாபார நிலையங்களும் (business houses) முறிந்தன. அதனுல் பொது நலனுக்குகந்த முறையில் பாங்கு நோட்டுகள் வெளியீட்டைக் கட்டுப் படுத்துவது இன்றியமையாததென்பதைப் பலர் உணர்ந் தனர். ஆயினும் எவ்வாறு கட்டுப்படுத்துவது சிறந்த முறை என்பதுபற்றிக் கருத்து வேற்றுமைகள் இருந்தன. இதுபற்றிய சர்ச்சை 1810–ல் ஆரம்பமாயது. இதுபற்றி இரண்டுவித அபிப்பிராயங்கள் உலவின.

பாங்கு நோட்டைப் பொற்கட்டிச் சான்ருகக் (bullion certificate) கருதவேண்டுமென்றும், தங்க அடிப்படை யின் மீதுதான் நோட்டை வெளியிடவேண்டுமென்றும், இவ்வரம்பு இல்லாவிடில் பாங்கு நோட்டுகள் அமிதமாக வெளியிடப்படுமென்றும், அதனுல் பல தீமைகள் விளையு மென்றும், உலோகச் செலாவணியின் பிரதிநிதியாக ஒரு பாங்கு நோட்டைக் கருதவேண்டுமென்றும் சிலர் வாதித் தனர். இவ்வாதத்தை ஏற்ருல் பணமுறையில் பத்திரம்

ஏற்படும். ஆனால் இம்முறையில் சிக்கனமில்லை. இவ்வகையில் பணத்தைச் சுலுவில் பெருக்கவும், சுருக்கவும் முடியாது; நெருக்கடியான காலத்தில் அதிக நோட்டு வெளியிடவும் முடியாது. அதுவுமின்றி, நூற்றுக்கு நூறு விழுக்காடு, நோட்டுக்குப் பதில் ரொக்க இருப்பு வைத்திருப்பதால் அதிகச் செலவு பிடிக்கும். மேலும் இது அவசியமற்றது.

நோட்டுகள் வெளியீட்டைப் பாங்குகளின் விருப்பத்திற்கு விட்டுவிடவேண்டுமென்று சிலர் வாதித்தனர். அவ்வாறு விட்டால், வியாபாரத் தேவைகளுக்கு ஏற்ப பாங்குகள் நோட்டுகளை அச்சிடும் என நம்பினர். வியாபாரத் தேவைகளுக்குமேல் அதிகமாக நோட்டுகளை வெளியிட்டால், அவை ரொக்கமாக மாற்றப்படும். அவ்வாறு ரொக்கமாக மாற்றுவதற்கு ஓரளவு இருப்பு இருந்தால் போதும். இதனால் பணப்பெருக்கமும் தடுக்கப்படும். ஆனால் இதன்படி நூற்றுக்கு நூறு விழுக்காடு ரொக்க இருப்பு வைத்திருக்கவேண்டிய அவசியமில்லை. இம்முறையால் இரண்டு அநுகூலங்கள் ஏற்படும். ஒன்று சிக்கனம். மற்றொன்று பாங்குகள் உசிதம்போல் நோட்டு வெளியீட்டைக் கூட்டவும் குறைக்கவும் முடியும்.

ஆனால் இக் கொள்கையை எதிர்த்தவர்களுக்கு ஆதரவாகக் கடந்த கால அநுபவம் இருந்தது. அவர்கள், பாங்கர்கள், எவ்வளவு நோட்டுகள் அச்சிடவேண்டும் என்பதை நிர்ணயிப்பதற்குரிய நிலையில் இல்லையென்றும், பாங்கர்கள் போதிய அளவு முன்யோசனையும் ஜாக்கிரதையும் உள்ளவர்களாக இல்லையென்றும், நோட்டுகள் வெளியீட்டை பாங்கர்களிடம் கொடுப்பது, வர்த்தகர்களில் ஒரு சாராரிடம் அளவுக்கு மீறிய அதிகாரத்தை ஒப்படைப்பதாகும் என்றும் வாதித்தனர்.

**நோட்டு வெளியீட்டைக் கட்டுப்படுத்தும் முறைகள் (Methods of Regulating Note Issue) :** நோட்டு வெளியீட்டைக் கட்டுப்படுத்தும் முறைகள் நான்கை இனிக் காண்போம்.

**க) வரையறுக்கப்பட்ட நம்பிக்கை முறை**
**(The Fixed Fiduciary System)**

ஒருவிதத் தங்க இருப்புமின்றிக் குறிப்பிட்ட அளவு நோட்டுகளை வெளியிட இம்முறை வகை செய்கிறது. இந்நோட்டுகளுக்கு ஈடாகத் தங்கம் கிடையாது. இதை நம்பிக்கை வெளியீடு என்கிறோம். இந்நோட்டு வெளியீட்டுக்கு ஆதாரமாக அரசாங்கக் கடன் பத்திரங்கள் (government securities) இருக்கின்றன. குறிப்பிட்ட அளவுக்குமேல் வெளியிடப்படும் நோட்டுகளுக்கு ஈடாக நூற்றுக்கு நூறு விழுக்காடுத் தங்கம் இருக்க வேண்டும். இம்முறை இங்கிலாந்தில் நிலவுகிறது. 1844-ம் ஆண்டு இயற்றப்பட்ட பாங்கு உரிமைச்சாசனச் சட்டப்படி (The Bank Charter Act) தங்க ஈடின்றி £ 14 மில்லியன் நோட்டுகள் அச்சிட இங்கிலாந்து பாங்கு (Bank of England)க்கு அதிகாரம் அளிக்கப்பட்டது. இது காலப்போக்கில் படிப்படியாக உயர்த்தப்பட்டு, 1948-ல் £ 1,300 மில்லியனாக உயர்த்தப்பட்டது. இம்முறையின் நோக்கம், நோட்டுகளை மாற்றுவதற்குப் போதுமான இருப்பைச் சப்ளை செய்வதே. ஆனால் இம்முறைப்படி நோட்டு வெளியீட்டை உசிதம் போல் கூட்ட முடியாது. நோட்டு வெளியீடு மார்க்கண்டேயனைப்போல என்றும் பதினாறாக இருக்கும். கைவசம் இருக்கும் தங்க இருப்புகள் அதிகரித்தால்தான் நோட்டு வெளியீட்டைக் கூட்ட முடியும். நெருக்கடி அல்லது பீதி ஏற்படும் காலங்களில் மக்கள் அதிக நோட்டுகளை வேண்டினால், இச்சட்டத்தின் விதிகளைத் தளர்த்தியோ அல்லது சட்டத்தைத் தற்காலிகமாக ரத்துச் செய்தோ

அவற்றை அச்சிடும்படி நேரும். மேலும் இம்முறை அநாவசியமாக அதிகமான தங்கத்தை முடக்குகிறது. இக்காரணங்களால் மாக்மில்லன் கமிட்டி (Macmillan Committee) இம்முறையைக் கைவிடும்படி சிபாரிசு செய்தது.

உ) அதிக பக்ஷ நம்பிக்கை முறை
(Maximum Fiduciary System)

இதன்படி தங்க இருப்பின்றி அதிகபக்ஷம் இவ்வளவு நோட்டு வெளியிடலாம் என்று நிர்ணயிக்கப்படுகிறது. இவ்வுயர்ந்தபக்ஷம் ஆண்டொன்றில் சராசரி செலாவணி யாகும் நோட்டுகளைவிட அதிகமாகவே நிர்ணயிக்கப் படுகிறது. வியாபாரம் பெருகினாலும், செலாவணித் தேவை அதிகரித்தாலும் இவ்வுயர்ந்த பக்ஷம் உயர்த்தப்படுகிறது. 1928–க்கு முன் பிரான்ஸில் இம்முறை நிலவியது. இம் முறையை மாக்மில்லன் கமிட்டி இங்கிலாந்துக்குச் சிபாரிசு செய்தது. அநாவசியமாகத் தங்கத்தை முடக்கவில்லை என் பதும், ரொக்க இருப்பைப் பாங்குகளின் இஷ்டத்திற்கு விட்டு விடுகிறது என்பதும் இம்முறையில் உள்ள அனு கூலங்கள்.

ஊ) விகித இருப்பு முறை
(Proportional Reserve System)

இம் முறைப்படி மத்திய பாங்கு ஓரளவு சதவிகிதம் (பொதுவாக 25-லிருந்து 40 சதவிகிதம் வரை) தங்கத்தை, நோட்டு வெளியீட்டுக்கு ஈடாக வைத்திருக்க வேண்டும். இம்முறை முதல் உலகப்போருக்குப் பின் பழக்கத்திற்கு வந்தது. 1928–ல் பிரான்ஸ் இம்முறையைக் கடைப் பிடித்தது. ஹில்டன் யங் (Hilton–Young) கமிஷன் இந்தியாவுக்கு இம்முறையை சிபாரிசு செய்தது. 1934–ம் ஆண்டு இயற்றப்பட்ட இந்திய ரிசர்வ் பாங்குச் சட்டத் திலும் (The Reserve Bank Act) இது இடம் பெற்

றுள்ளது. இம்முறையில் உள்ள அனுகூலம் காலத்திற்கு ஏற்ப பணத்தைச் சுருக்கவும் பெருக்கவும் வகை செய்வதே. தங்க இருப்பின் ஏற்ற இறக்கத்திற்கு ஏற்றுப்போல் இம் முறையில் அதே அளவு பணப்பெருக்கமும் சுருக்கமும் இல்லை. தங்க இருப்பு நோட்டு வெளியீட்டில் 40% இருக்க வேண்டுமென்ருல், நாற்பது ரூபாய் பெறுமான தங்கத் தைப் புதிதாக மத்திய பாங்கு பெற்ருல், நூறு ரூபாய் பெறுமான நோட்டுகளை அச்சிடலாம். அதேபோல்தான் பணச் சுருக்கமும். சட்ட பூர்வமான குறைந்த பக்ஷத்திற்கு மேலேயே தங்க இருப்புகளை இம்முறையின்கீழ் வேலை செய்யும் மத்திய பாங்குகள் வைத்திருக்கின்றன.

ச) நான்காம் முறை மூன்ரும் முறையினின்றும் சிறிதே மாறுபட்டது. இதன்படி மத்திய பாங்கு தன் இருப்பின் ஒரு பகுதியை பிறநாட்டுச் செலாவணியாக வைத்திருக் கலாம். ஆனல் இப்பிறநாட்டுச் செலாவணி பொன் திட்டத்தைச் சார்ந்திருக்க வேண்டும். இம்முறையை ஒட்டி இந்திய ரிசர்வ் பாங்கு தன் இருப்பின் ஒரு பகுதிகளை ஸ்டார்லிங் சீட்டுக்களாக (sterling bills) வைத்திருக்கிறது. தங்கத்தைச் சிக்கனம் செய்வதற்காக இம்முறை அநுசரிக்கப்படுகிறது.

விகித இருப்பு முறை ஐரோப்பாக் கண்டம், அமெரிக்க ஐக்கிய நாடுகள், தென் ஆப்பிரிக்கா, இந்தியா முதலான நாடுகளில் நிலவுகிறது. இந்திய ரிசர்வ் பாங்கு இருப்பில் 40% பெறுமானத்தை பொன் நாணயமாகவோ, கட்டியாகவோ, ஸ்டார்லிங் கடன் பத்திரங்களாகவோ (sterling securities) வைத்திருக்கலாம். ஆனல் குறைந்தது நாற்பது கோடி ரூபாய் பெறுமான தங்கமாவது இருக்க வேண்டும்.

# ஏழாம் அதிகாரம்

## மத்திய பாங்குகள்

**அலுவல்கள்:** இந்தியச் செலாவணி, நிதிபற்றி விசாரித்த ராயல் கமிஷன் (Royal Commission on Indian Currency and Finance) முன், இங்கிலாந்து பாங்கியின் நிர்வாகி (Governor) சாட்சியம் அளிக்கையில் ஒரு மத்திய பாங்கின் அலுவல்களைப் பற்றிக் கூறியதாவது: "மத்திய பாங்குக்கு நோட்டு வெளியிடப் பிரத்தியேக உரிமை இருக்கவேண்டும். சட்ட பூர்வமான செலாவணியின் அளவையும் அது நிர்ணயிக்க வேண்டும். அது அரசாங்கத்தின் நிதிகளையும் (balances) வைத்திருக்க வேண்டும். நாட்டில் உள்ள பிற பாங்குகளின் இருப்புகளையும் வைத்திருக்க வேண்டும். உள்நாட்டிலும் வெளிநாட்டிலும் நடக்கும் அரசாங்கத்தின் நிதி விவகாரங்கள் யாவும் மத்திய பாங்காகிய காரியக்காரன் மூலமே நடத்தப்பட வேண்டும். பணத்தின் மதிப்பைப், பணப் பெருக்கத்தினுலோ சுருக்கத்தினுலோ ஒரே படியாக இருக்கச் செய்வதும் மத்திய பாங்கின் பொறுப்பே. நெருக்கடியான காலங்களில் ஒப்புக் கொள்ளப்பட்ட சீட்டுகள் (approved bills) குறுகிய காலக்கடன் பத்திரங்கள், அரசாங்கக் காகிதம் (Government Paper) இவற்றைப் புனர்க்கழிவு (re-discount) செய்வதன் மூலம் பணத்தை விரிவடையச் செய்வதும் அதன் பொறுப்பே."

### க) நோட்டு வெளியீட்டு நிர்வாகம் (Management of Note Issue)

ஸ்திரமான செலாவணி நாட்டின் நன்மைக்கு இன்றியமையாதது. அரசாங்கமே இவ்வேலையை நேரடியாகவும் மேற் கொள்ளலாம். ஆனுல் பணத்தைப் பெறச்சுளுவான வழியாக இதைக்கருதி அரசாங்கம் ஏராளமான நோட்டுகளை அச்சிடலாம். ஏனெனில் புதிய வரிகளைப் போடுவதால்

அரசாங்கம் பொது மக்கள் பிரியத்தை இழக்கலாம். அரசாங்கம் தன் செலவைச் சுருக்குவதென்பது சாமானியமாக நடக்கக் கூடியதல்ல. அதுவுமின்றி பணக்கொள்கை (Monetary Policy) அரசியல் நெருக்கடிகளுக்கு அப்பாற்பட்டதாக இருக்க வேண்டும். இவ்வாறு செய்வதற்கு இலகுவான வழி ஒரு பாங்கின் கையில் நோட்டு வெளியீட்டை ஒப்படைப்பதே.

நோட்டு வெளியிடும் அதிகாரத்தைப் பாங்குக்குத் தான் கொடுக்க வேண்டும் என்பதை ஒப்புக் கொண்டால், அவ்வதிகாரம் ஒரு மத்திய பாங்குக்கு இருக்க வேண்டுமா அல்லது பல பாங்குகளுக்கு இருக்க வேண்டுமா என்ற கேள்வி அடுத்துப் பிறக்கிறது. பல பாங்குகளுக்கு இவ்வதிகாரம் இருந்தால் பொறுப்பு பிரிக்கப்படுகிறது. எல்லாப் பாங்குகளும் தங்களைச் சமமாகக் கருதுமாதலால் தலைமை ஸ்தானம் (leadership) ஒரு பாங்குக்கும் இருக்காது. பல சிக்கலான பிரச்சினைக்கொள்கைகளைத் தீர்ப்பதையும், விரிவான நிர்வாகத்தையும் தன்னகத்தே கொண்டுள்ளது பணமுறை. பல வெளியீட்டு அதிகாரிகள் (Issuing authorities) இருந்தால், இவைகளை நிர்ணயிக்கும் ஒரு கட்டுப்பாட்டுச் சக்தி இருக்க முடியாது. பல வெளியீட்டு அதிகாரிகளைப் பல குதிரைகள் பூட்டிய சாரட்டு வண்டிக்கும், அவர்களை நிர்வகிக்கும் ஒரு மத்திய அதிகாரியை, லகானைப் பிடித்திழுத்து அக்குதிரைகளை அடக்கும் சாரதிக்கும் ஒப்பிடலாம். இங்ஙனம் பல வெளியீட்டு அதிகாரிகள் இருப்பது ஒரு நாட்டுக்குப் பலவீனம். இதனால் நெருக்கடியான நேரத்தில் கட்டுக்கோப்பாகத் துரித நடவடிக்கை எடுக்க முடியாது.

உ) அரசாங்கப் பாங்கு (Government Banker)

அரசாங்கத்திற்கும் மத்திய பாங்குக்கும் ஒரு தனிப்பட்ட உறவு இருக்கிறது. அரசாங்கத்திற்கு மத்திய

பாங்குகள் செய்யும் அலுவல்கள் பாங்கு உரிமைச் சாசனங்களில் (Bank Charters) வரையறுக்கப்பட்டிருக் கின்றன. அவைகள் அரசாங்கக் கணக்குகளையும், தேசியக் கடன்களையும் நிர்வகிக்கின்றன. எவ்விதமான பிரத்தியேக ஊதியமின்றி அவை அரசாங்கத்தின் நிதிமணியங்களாக (fiscal agents) வேலை பார்க்கின்றன. பெருந் தொகைகளான அரசாங்க டிபாசிட்டுகளை வைத்திருப்பதுவும் அதுவே. சாதாரணமாக அவற்றுக்கு வட்டி இல்லை.

ங) பாங்கர்களின் பாங்கு (Bankers' Bank)

உறுப்பினர் பாங்குகளுக்கு (member-banks) புனர்க் கழிவு (re-discounting) சலுகைகளை அளிப்பதன் மூலம், அவை கடன் வாங்க மத்திய பாங்கு ஏது செய்கிறது. மத்திய பாங்கு நாட்டின் பாங்குகள் இருப்புகளின் இருப் பிடம் (Custodian of the country's banking reserves). பாங்குகள் எல்லாம், இங்கிலாந்தைப் போல் சம்பிர தாயத்தை ஒட்டியோ, இந்தியா, அ. ஐ. நா. போல் சட்டத்தை ஒட்டியோ, தங்கள் டிபாசிட்டுகளின் ஒரு சதவிகிதத்தை மத்திய பாங்கில் வைத்திருக்க வேண்டும். மத்திய பாங்குக்கும் பிற வர்த்தக பாங்குகளுக்கும் ஒரு முக்கிய வேறுபாடு உண்டு. மத்திய பாங்குக்கு லாப நோக் குக் கிடையாது. பிற பாங்குகளைப் போல் தான் மட்டும் திவாலா ஆகாமலும், பாங்குமுறை (banking system) பூராவும் திவாலா ஆகாமலும் பார்த்துக் கொள்ள வேண்டிய பொறுப்பு மத்திய பாங்கைச் சார்ந்தது. இக்காரணங்களை முன்னிட்டு மத்திய பாங்குகள் டிபா சிட்டுகள் பேரில் வட்டி கொடுப்பதில்லை. வர்த்தக பாங்கு களுடன் போட்டியைத் தவிர்ப்பதற்காக, மத்திய பாங்கு மக்களுடன் நேரிடையான தொடர்பு வைத்துக் கொள்வ தில்லை,

ச) பிறநாட்டுச் செலாவணிகளில் ஸ்திரம்
(Stability of Foreign Exchanges)

செலாவணி அலகின் (currency unit) புறம்பான மதிப்பை (External Value) வெளிநாடுகளில் ஸ்திரமாக வைத்திருக்க வேண்டிய பொறுப்பும் மத்திய பாங்கைச் சார்ந்ததே. பிறநாட்டுச் செலாவணிகளின் பரிவர்த்தனை களை நேரடியாகக் கட்டுப்பாடு செய்ய அது தங்கத்தை அல்லது பிற நாட்டுச் செலாவணிகளை வாங்க வேண்டும் அல்லது விற்கவேண்டும். பரிவர்த்தனை வீதங்களை மறை முகமாகக் கட்டுப்பாடு செய்ய விரும்பினால் பாங்கு வீதத்தை (bank rate) மத்திய பாங்கு மாற்ற வேண்டும்.

டு) உள்நாட்டு ஸ்திரம் (Internal Stability)

செலாவணியின் அளவைக் கட்டுப்படுத்துவதன் மூலம், உள்நாட்டில் விலைவாசிகளை ஒரே சீராக வைத் திருக்கவேண்டிய பொறுப்பும் மத்திய பாங்கினுடையதே.

சூ) இறுதியாகக் கடன் கொடுக்கும் நிலையம்
(Lender of The Last Resort)

மத்திய பாங்குதான் இறுதியாகக் கடன் கொடுக்கும் ஸ்தாபனம். முதல் வகுப்புச் சீட்டுகளை மத்திய பாங்கில் கழிவு (discounting first class bills) செய்வதன் மூலமும், குறுகிய காலக் கடன்பத்திரங்கள் ஈட்டின் பேரில் மத்திய பாங்கிடம் கடன் வாங்குவதன் மூலமும், பிற பாங்குகள் தங்கள் ரொக்க இருப்புகளை (cash resources) இமைப்பொழுதில் அதிகரித்துக் கொள்ள முடியும். பீதி அல்லது நெருக்கடி ஏற்பட்டு மக்கள் எல்லோரும் தங்கள் டிபாசிட்டுகளை ஏககாலத்தில் திருப்பி வாங்க ஆரம்பித்தால், இவ்வாறு தங்கள் ஆஸ்திகளை ரொக்கமாக கைந்நொடிப் பொழுதில் மாற்றுவதால் பாங்குகளுக்குப் பெருத்த அநுகூலம் இருக்கிறது.

ஆகையால் நெருக்கடியான காலத்தில் பணம் பெறுவதற்கு மத்திய பாங்கு ஆதிமூலமாயிருக்கிறது.

இறுதியாக, மத்திய பாங்கு வேறு சில்லறை அலுவல்களையும் செய்கிறது. எடுத்துக்காட்டாக வர்த்தகப் பாங்குகளின் வரைவுகளையும் (drafts), செக்குகளையும் (cheques) தீர்க்கும் வீடாகவும் (clearing house) விளங்குகிறது.

## பணத்தின் தேசிய நிர்வாகம்
## (The National Control of Money)

சமயம், அரசியல், பல நாடுகளிடை உள்ள உறவு, தனிப்பட்டவர் உடைமை — இவைகளைப்பற்றி மட்டும் கவனித்த அரசாங்கம் மறைந்து விட்டது. பூரண அரசாங்கம் (total government) பொருளியல் விவகாரங்களிலும் தலையிட ஆரம்பித்துவிட்டது. பொருளியல் நடவடிக்கைகளுடன் நெருங்கிய தொடர்பு வைத்துக் கொள்வது அரசாங்கத்திற்குப் புதிதல்ல. நல்லதற்கோ. கெட்டதற்கோ எதை, எப்பொழுது, எங்கு, எவ்வாறு, உற்பத்தி செய்யவேண்டும் என்பதை அரசாங்கமே இப்பொழுது தீர்மானிக்கிறது. எதிர்காலத்தில், அண்மையில் இப்பாகத்தை அரசாங்கங்கள் துறப்பதாக இல்லை.

அரசாங்கங்கள் தங்கள் விருப்பம் போல் தேசியப் பொருளியல்களை மாற்றியமைக்க முற்படலாம். பணத்தைப் பற்றிய சூத்திரக்கயிறு தன்னிடம் இருக்கிறதா அல்லது மத்திய பாங்கிடம் இருக்கிறதா என்பதைப் பற்றி அது கவலைப்படாமல் இருக்கலாம். எங்ஙனமாயினும் அரசாங்கத்தின் கையில் பொருளியல் நடவடிக்கையை இறுதியாக நிர்ணயிக்கும் அதிகாரம் இருக்கிறதென்பதை நாம் நினைவில் இருத்தவேண்டும். தற்பொழுது மத்திய பாங்குகளுக்கு என்னென்ன அதிகாரங்கள் இருக்கின்றன என்பதையும், அவை எவ்வாறு பணமுறை மூலம்

உற்பத்தியாளர்களேயும், பொருள் உபயோகிப்பவர்களேயும் பாதிக்கிறதென்பதையும் நாம் காண்போம்.

மத்திய பாங்குகள் இரு தலேயாய அலுவல்களே நிறைவேற்ற வேண்டும். அவையாவன: 1) செலாவணி அலகின் மதிப்பைக் கட்டுப்படுத்துவது, 2) பூரண வேலே (full employment) க்கும் அதிகபக்ஷ உற்பத்திக்கும் வழி கோலுவது. இவ்விரண்டு அலுவல்களேயும் நிறை வேற்ற நான்கு வகைக்கருவிகள் மத்திய பாங்குக்கு இருக்கின்றன. அவையாவன: 1) பாங்கு வீதம், 2) திறந்த சந்தை நடவடிக்கைகள், 3) ஒழுக்கத் தூண்டுகோல், 4) உறுப்பினர் பாங்குகளின் ரொக்க இருப்பு வீதங்களே மாற்றுதல்.

## க) பாங்கு வீதம் (Bank Rate)

பல மத்திய பாங்குகள் தங்கள் பாங்கு வீதங்களேப் பிரசுரிக்கின்றன. அடிக்கடி அவற்றை மாற்றுகின்றன. முதல்தர சீட்டுகளே (first class bills) க் கழிவு (discount) செய்யும் வீதமே பாங்கு வீதம் எனப்படும். சில நாடுகளில் பாங்கு வீதம் கழிவு வீதம் (discount rate) என்று கூறப் படுகிறது. பாங்கு வீதம் எங்ஙனம் இயங்குகிறதென்பதை ஒரு எடுத்துக்காட்டால் விளக்குவோம். ஒரு நாட்டின் இறக்குமதியின் மதிப்பு ஏற்றுமதியின் மதிப்பைவிட அதிக மாக இருக்கிறதென்று வைத்துக் கொள்வோம். இதனுல் தங்கம் நாட்டைவிட்டு வெளியேறும். ஏனெனில் கூடுதல் தொகையை நம் நாட்டுச் செலாவணியில் பிற நாடு களுக்கு அனுப்பமுடியாது. அங்ஙனமாலுல் நம்நாட்டுச் செலாவணியையே ஏற்றுமதி செய்துவிடலாம். ஆனுல் அது பிற நாடுகளில் செல்லாததாதலால் அதை அவைகள் ஏற்றுக்கொள்ளா. ஆனுல் தங்கத்தை எல்லா நாடுகளும் ஏற்றுக் கொள்ளும். தங்கம் பூராவும் கரையும் வரை

மத்தியபாங்கு வாளாவிராது. தங்கம் வெளியேறுவதைத் தடுக்க நடவடிக்கை எடுக்கும். பாங்கு வீதத்தை உயர்த்தும். இதைப் பின்பற்றிப் பிற பாங்குகள் தத்தம் கழிவு வீதத்தை உயர்த்தும். அதனுல் பாங்குகளிடமிருந்து புதிதாகக் கடன் வாங்கும் தொகையும், கழிவுக்காகச் சமர்ப்பிக்கப்படும் சீட்டுகள் தொகையும் குறையும். கழிவு வீத உயர்வைத் தொடர்ந்து, பாங்குகள் டிபாசிட்டுகள் பேரில் கொடுக்கும் வட்டி வீதமும் உயரும். இதனுல் மக்கள் சேமித்து வைப்பது கூடும்; செலவிடுவது குறையும். அதிகம் வட்டி கிடைப்பதை உத்தேசித்துப் பிறநாடுகளிலிருந்து வெண்ணிலைக் கடன்கள் (floating debts) அந் நாட்டுக்கு வரும். வரவே தங்கமும் வரும். கடன்களைத் தீர்ப்பதற்காகவோ அல்லது கழிவுச் சந்தையில் (discount market) அதிக லாபம் வருவதைக் கருதியோ ஏககாலத்தில் ஏராளமான பங்குகள் விற்கப்படுவதால் அவற்றின் விலை சரசமாகும். பாங்கு வீதத்தை உயர்த்துவதனுல் பொதுவாக விலைவாசிகள் குறையும். இதனுல் ஏற்றுமதிகள் அதிகரிக்கும். ஏனெனில் பிறநாடுகள், முன்னைவிட விலை மலிவாயிருப்பதால், அதிகச் சாமான்களை வாங்கும். அதே சமயம் இங்கு விற்பது முன்னைப்போல் அவ்வளவு லாபகரமாயில்லாததால் இறக்குமதி குறையும்.

### உ) திறந்த சந்தை நடவடிக்கைகள் (Open Market Operations)

தன் விருப்பம் போல் பணத் தொகையைப் பெருக்க ஒரு மத்திய பாங்குத் தீர்மானிக்கலாம். அரசாங்கத்திற்கு நிதித்தேவை இல்லாவிட்டாலும், வர்த்தகப் பாங்குகள் முதல்தர சீட்டுகளைப் புனர்க்கழிவு (re-discounting) செய்யுமாறு கேட்காவிட்டாலும், மத்திய பாங்கு திறந்த சந்தைக் கொள்கையை (open-market policy) மேற்கொள்கிறது. பாங்கு வீதத்தை மாற்றுவதற்குப் பிரதியாகவோ,

அல்லது பாங்கு வீதத்துக்கு அநுசரணையாகவோ, திறந்த சந்தை நடவடிக்கைகளை மத்திய பாங்கு மேற்கொள்கின்றது. மத்திய பாங்கு நேரடியாகக் கடன் பத்திரங்கள், சீட்டுகள், அரசாங்கப் பத்திரங்கள் (bonds), இவற்றை வாங்குவது அல்லது விற்பது திறந்த சந்தை நடவடிக்கைகளில் அடங்கும். பண நிலைமைகளை இறுக்க (tight) விரும்பினால் மத்திய பாங்கு ரொக்கத்திற்குக் கடன் பத்திரங்களை விற்கும். கலகலப்பான (easy) பண நிலைமைகளை உண்டாக்க விரும்பினால் மத்திய பாங்கு பொதுமக்களிடமிருந்து கடன் பத்திரங்களை வாங்கும். இவ்வாறு சந்தையில் அதிகப்பணம் உலவும்படிச் செய்கிறது. 1914-ம் ஆண்டிலிருந்து பாங்கு வீதத்தைவிடத் திறந்த சந்தை நடவடிக்கைகள் முக்கியமானதா யிருக்கின்றன.

**ங) ஒழுக்கத் தூண்டுகோல்** (Moral Suasion)

தன் விருப்பங்களை நிதி நிலையங்களுக்கு (financial houses)த் தெரிவிப்பதன் மூலம் தன் செல்வாக்கை மத்திய பாங்கு நிலை நாட்டலாம், 'நல்ல காலம்' வருகிறது என்று மத்திய பாங்கு சொல்ல முடியாது. எல்லா வெளியீடுகளும் பக்ஷத்துடன் கவனிக்கப்படும் என்றும் முன்னதாகவே அறிவிக்க முடியாது. வியாபார மந்த காலங்களில் தொழில்களைத் தூண்டவும் முடியாது. மத்திய பாங்கின் கட்டுப்பாடு அதிகாரம் (power of control) ஒரு மூடிபோன்றது. பொருளியல் நடவடிக்கை ஓட்டத்தைக் (the flow of economic activity) குறைக்க அல்லது தடுக்க மூடியை மூடலாம். ஆனால் உள்ளே அமுக்கும் சக்தி இல்லையெனின் மூடியைத் திறந்தாலும் ஒரு ஓட்டமும் இராது.

**ச) உறுப்பினர் பாங்குகளின் ரொக்க இருப்பு வீதங்களை மாற்றுதல்**
(Alteration of Member Banks' Cash Reserve Ratios)

சில மத்திய பாங்குகளுக்கு, அமெரிக்க ஐக்கிய

நாட்டுச் சமஷ்டி ரிசர்வ் பாங்கை (Federal Reserve Bank)-ப் போன்று, உறுப்பினர் பாங்குகள் தம்மிடம் வைத்திருக்கும் ரொக்க இருப்பு வீதங்களை மாற்ற அதிகாரம் உண்டு. கிரேட் பிரிட்டனில் மாக்மில்லன் கமிட்டியார் இக்கருவியின் உபயோகத்தைப் பரிசீலித்தனர். இங்கிலாந்து பாங்கு அம்முறையைப் பின்பற்றலாம் என்றும், ஆனால் அதைச் சட்டபூர்வமான அதிகாரமாகக் கொடுக்க வேண்டியதில்லை என்றும் ஒரு முடிவுக்கு வந்தனர்.

இஃது மத்திய பாங்குகளின் சக்திவாய்ந்த ஆயுதம். இருப்பு வீதங்களைக் (reserve ratios) குறைப்பதன் மூலம் மத்திய பாங்கு, பாங்குப் பணத்தைப் (credit) பெருக்கலாம். அவ்வீதங்களை உயர்த்துவதன் மூலம் பாங்குப் பணத்தைச் சுருக்கலாம். 1933–ல் இவ்வதிகாரம் அமெரிக்க ஐக்கிய நாட்டுச் சமஷ்டி இருப்புக் குழுவுக்கு (The Federal Reserve Board of the U. S. A.) கொடுக்கப்பட்டது. இந்தியாவில் ஷெடியூல்டு பாங்குகள் (scheduled banks), ரிசர்வ் பாங்கில் சட்டப்படி ஓரளவு ரொக்க இருப்பு வைத்திருக்க வேண்டும். பாங்கு கம்பெனிகள் சட்டத்தின் (The Banking Companies Act) 24-வது பிரிவின்படி இந்தியாவிலுள்ள ஒவ்வொரு பாங்கும், அன்றாடம் வேலை முடிவில் ரொக்கமாகவோ, தங்கமாகவோ, வில்லங்கமில்லாத, ஒப்புக்கொள்ளப்பட்ட கடன் பத்திரங்களாகவோ, (unencumbered approved securities) தன் மொத்த நேரம், டிமாண்டு (time and demand liabilities) கடன்களில் 20% க்குக் குறையாமல் வைத்திருக்க வேண்டும். பணப் பெருக்கம் ஏற்பட்டால் அதைத் தடுக்க இது நல்ல கருவி. ஆனால் இம்முறையால் பிற்போக்கான இந்தியாவில் பெருவாரியான பணம் வாளாத் தேங்கிக் கிடக்கும். பணம் சும்மாத் தேங்கிக் கிடப்பதால் பாங்குகளுக்கு லாபமில்லை; மக்க

ளுக்கும் நன்மையில்லை. அ. ஐ. நாடுகளைப் போன்று வேண்டியபோது வேண்டியவாறு ஏற்றவும் அல்லது இறக்கவும் கூடிய இருப்பு வீதம் இந்தியாவின் தேவைகளுக்கு ஏற்றது. அதனால் சிறந்த விளைவும் ஏற்படும்.

பணத்தின் அளவையும், பாங்குப் பணத்தின் அளவையும் கட்டுப்படுத்துவதற்கு இன்னொரு கருவி வரி விதிப்பு. பணத்தின் மீது வரி விதிப்பதால் மந்த காலங்களில் பணம் அதிவேகமாகப் புரளும். இது பொருளியல் தேக்கத்திற்கு எதிரான நடவடிக்கையாகும். பணம் வைத்திருப்பவர் மீது ஒரு சிறு வரியை அடிக்கடி போட்டால், அவர் வரியைத் தவிர்க்கப் பணத்தைச் செலவழிப்பார். அரசாங்கத்திற்கே வரி விதிக்கும் அதிகாரம் இருப்பதால், அரசாங்கமே இவ்வதிகாரத்தை உபயோகிப்பதாக வைத்துக்கொள்ளலாம்.

**பொருளியல் கட்டுப்பாட்டின் வரவு செலவுத் திட்ட முறைகள் (Budgetary Methods of Economic Control)**

தற்காலத்தில் ஆதிக்கம் செலுத்துவது வரவு செலவுத் திட்ட முறையே. சரியான முறையில் உபயோகப் படுத்தினுல் இம்முறையால் ஒரு தீங்கும் விளையாது. வாங்கும் சக்தி குறைவாக இருப்பதால் மந்தங்கள் ஏற்படுவது எல்லோரும் அறிந்ததே. வேலை, உற்பத்தி இவற்றை ஒரே சீராக வைத்திருக்கச் செலவும் அதே அளவு இருக்கவேண்டும். போதிய செலவு செய்வதற்குப் போதிய வருவாய் வேண்டும். வருவாய் குறைந்தால் என்செய்வது? பற்றுக்குறை வரவு செலவுத் திட்டத்தின் மூலம் இத்துண்டை நிரப்பலாம். எவ்வாறெனில், ஒருவருக்குச் செலவினமாக இருப்பது இன்னொருவருக்கு வரவினம். வரவுக்கு மேல் அதிகமாக அரசாங்கம் செலவழித்தால் மக்களின் வரவு பெருகும். வேலையின்மையைப் போக்க அரசாங்கம் தன் சொந்த ஹோதாவில் தொழில்களை ஆரம்பிக்கலாம். அத்தொழில்களை

ஆரம்பிக்க வரிகளிலிருந்து கிடைக்கும் வருவாய் போத வில்லையென்ருல், மக்களிடமிருந்தோ பிற அரசாங்கங் களிடமிருந்தோ கடன் வாங்கியோ, அல்லது நோட்டுகளை அதிகமாக அச்சிட்டு வழங்கியோ இச்செலவினங்களைச் செய்யலாம். இங்ஙனம் வேலை கிடைத்தவருக்கு ஊதியம் கிடைப்பதால் மக்களின் வாங்கும் சக்தி அதிகமாகும். மேலும் செழிப்பை (boom) ஒரு உபரி வரவு செலவுத் திட்டத்தின் (budget surplus) மூலம் கட்டுப்படுத்தலாம்.

இங்ஙனமாக வணிகச் சகடத்தை (trade cycle) நேரிடையாக எதிர்ப்பதே பொருளியல் கட்டுப்பாடு வரவு செலவுத் திட்டத்தின் உண்மையான நோக்கம் (the real nature of the budgetary system of economic control). வியாபாரச் சக்கரம் ஏற்படுவதற்கான காரணங்களை அகற்றுவதற்கான பரிபூரணக் கொள்கையாய் இல்லா விடினும், நாம் உபயோகிக்கக் கூடிய சிறந்த கருவி வரவு செலவுத்திட்டக் கட்டுப்பாட்டு முறையே. இம் முறை உடனடியாக உபயோகிக்கத் தகுந்ததாகவும் அறிவுக்குப் பொருத்தமானதாகவும், நடைமுறைக்கு உகந்ததாகவும் இருக்கிறது.

# எட்டாம் அதிகாரம்

## பிறநாட்டுச் செலாவணிகள் (Foreign Exchanges)

உலகம் பல நாடுகளாகப் பிரிந்திருக்கிறது. ஒவ்வொரு நாடும் ஒரு தனிப்பட்ட செலாவணியை உபயோகிக்கிறது. இந்தியாவில் ரூபாயும், பிரிட்டனில் ப்வுண்டு ஸ்டர்லிங்கும், பிரான்ஸில் பிராங்கும், ஜெர்மனியில் மார்க்கும், இத்தாலியில் லிராவும், ரஷ்யாவில் ரூபிளும், அமெரிக்காவில் டாலரும், ஜப்பானில் யென்னும் (yen) செலாவணிகள். இவைகள் ஒவ்வொன்றும் மதிப்பில் மாறுபடுகின்றன. ஒரே செலாவணியை எல்லா நாடுகளும் உபயோகித்தால் சர்வதேச வியாபாரம் செய்வதில் யாதொரு சிக்கலும் இராது. எடுத்துக்காட்டாக, ரூபாய் சர்வதேசச் செலாவணியாக இருந்தால், இந்தியர்கள் ரூபாயைக் கொடுத்து உலகின் எந்தப் பகுதியிலிருந்து வேண்டுமானலும் பொருள்களை வாங்கலாம் அல்லது விற்கலாம். அதே போன்று உலகின் மற்றப் பகுதிகளில் இருப்பவர்கள் ரூபாயைக் கொடுத்து இந்தியாவிலிருந்து பொருள்களை வாங்கலாம் அல்லது விற்கலாம். ஆனல் நடைமுறையில் ஒவ்வொரு நாடும் ஒரு தனிச் செலாவணியை (currency) வைத்திருப்பதால், ஒரு நாட்டினர் இன்னொரு நாட்டிலிருந்து சாமான்கள் வாங்க வேண்டுமென்ருல், முதலில் தன் நாட்டுச் செலாவணியைப் பரிவர்த்தனை செய்து, பிற நாட்டுச் செலாவணியைப் பெற்றுப் பின் அதன் மூலம் சாமான்கள் வாங்கவேண்டும். எடுத்துக்காட்டாக, இந்தியா பிரிட்டனிலிருந்து சாமான்கள் தருவிக்க விரும்பினுல், முதலில் ரூபாயை மாற்றிப் பவுண்டு ஸ்டர்லிங்கைப் (pound sterling) பெற்றுப் பின் அதைக் கொண்டு பிரிட்டனில் சாமான்களை வாங்கவேண்டும்.

## பரிவர்த்தனை வீதம் (Rate of Exchange)

ஒரு நாட்டின் செலாவணி அலகுக்குப் (currency unit) பதிலாக எவ்வளவு பிறநாட்டுச் செலாவணி அலகைப் பெறமுடியுமோ, அதற்குப் பரிவர்த்தனை வீதம் என்று பெயர். திருஷ்டாந்தமாக, ஒரு பவுண்டு ஸ்டர்லிங்குக்குப் பதில் பதினைந்து ரூபாய் பெறமுடியும் என்றால் பரிவர்த்தனை வீதம் 1 : 15 என்று கூறப்படும். இவ்வாறாகப் பல பரிவர்த்தனை வீதங்கள் இருக்கலாம். ஒரு டாலருக்குப் பதில் ஐந்து ரூபாய் பெறமுடியும் என்றால் டாலருக்கும் ரூபாய்க்கும் உள்ள பரிவர்த்தனை வீதம் 1 :5 என்று கூறப்படும். இப்பரிவர்த்தனை வீதங்கள் செலாவணிகளுக்குள்ள கிராக்கி, சப்ளை இவற்றைப் பொறுத்திருக்கிறது. உதாரணமாகப் பிரிட்டிஷார் ரூபாயை வேண்டுவதைவிட, இந்தியர் அதிகம் பவுண்டு ஸ்டர்லிங்கை வேண்டினால் ஸ்டர்லிங்கின் மதிப்பு உயரும். முன்னர் 15 ரூபாய்க்கு ஒரு ஸ்டர்லிங்கைப் பெறலாமென்றால், இப்பொழுது அதைவிட அதிகமாக (16, 17 அல்லது 20) ரூபாய் கொடுக்க வேண்டியிருக்கும். இவ்வாறு பரிவர்த்தனை வீதம் நாடுகளின் செலாவணிகளின் வாங்கும் சக்தியைப் (purchasing power) பொறுத்திருக்கும்.

## அச்சுச் சமநிலைப் பரிவர்த்தனை (The Mint Par of Exchange)

எல்லா நாடுகளும் பொன் திட்டத்தைப் பின் பற்றினால் பரிவர்த்தனை வீதம் அச்சுச் சமநிலைப் பரிவர்த்தனையைப் பொறுத்திருக்கும். இரண்டு நாடுகள் ஒரே உலோகத் திட்டத்தைப் பின்பற்றினால் (உதாரணமாகப் பொன் அல்லது வெள்ளித்திட்டம்), அவைகளுக்கிடையே யுள்ள அச்சுச் சமநிலைப் பரிவர்த்தனையைப் பற்றி நாம் பேசலாம். அதாவது ஒரு நாட்டின் செலாவணி அலகில் உள்ள உலோக மதிப்பை, இன்னொரு நாட்டின் செலாவணி

அலகில் இவ்வளவு என்று குறிப்பிடுகிருேம். சட்டப்படி நிர்ணயிக்கப்பட்ட அளவு தூய உலோகம் அந் நாணயத்தில் இருப்பதைப் பொறுத்து அதன் மதிப்பு இருக்கும். இன்னெரு நாட்டின் செலாவணி அலகில் எவ்வளவு தூய உலோகம் இருக்கிறது என்பதை அச்சுச் சமநிலை சுட்டுகிறது. எடுத்துக்காட்டாக, 1925--31க்கு இடையில் லண்டனுக்கும் நியூயார்க்குக்கும் இடையில் இருந்த அச்சுச் சமநிலைப் பரிவர்த்தனையாவது ஒரு பவுண்டு ஸ்டர்லிங் = 4·8665 டாலர். அதாவது ஒரு சவரனில் (sovereign) 4·86 டாலர்களில் இருக்கும் தங்கம் இருந்தது. (ஸ்டர்லிங் = 113·0016 கிரயின் தங்கம்; டாலர் = 23·22 கிரயின் தங்கம்.) இவ்வாருக ஒரே உலோக முறையைப் பின்பற்றும் நாடுகளிடை உள்ள பரிவர்த்தனை வீதத்தை அச்சுச் சமநிலைப் பரிவர்த்தனை நிர்ணயிக்கிறது. ஆனுல் பொன் திட்ட முறையைப் பின்பற்றும் ஒரு நாட்டிற்கும் (2–ம். இங்கிலாந்து 1931க்கு முன்), வெள்ளித் திட்டத்தைப் பின் பற்றும் ஒரு நாட்டிற்கும் (உ–ம். இந்தியா 1893–க்கு முன்) வரையறுக்கப்பட்ட அச்சுச் சமநிலைப் பரிவர்த்தனை இருக்க முடியாது. அவற்றின் பரிவர்த்தனை வீதங்கள் அவ்வப்போது நிலவும் வெள்ளி, பொன் இவற்றின் விலைகளைப் பொறுத்திருக்கும்.

# ஒன்பதாம் அதிகாரம்

## பொதுவுடைமை நாட்டில் பணமும் விலைகளும்
## (Money and Prices in a Socialist State)

நாம் வசிக்கும் முதலாளித்துவ முறையில் உற்பத்திச் சாதனங்கள் (Means of Production), மூலப்பொருள்கள், உணவு—சுருக்கமாகச் சொன்னால் வாழ்க்கைக்கு வேண்டிய எல்லாப் பொருள்களும்— சில தனிப்பட்டவர்களுக்கோ அல்லது குழுவினர்களுக்கோ சொந்தமாய் இருக்கிறது. இவர்களிடையே பரிவர்த்தனைகள் செய்வதற்கும், பெருவாரியான உற்பத்திக்கும், பணம் இன்றியமையாததாய் இருக்கிறது.

ஆனால் சோவியத் யூனியனில் இவையாவும் அரசாங்கத்துக்கே சொந்தம். (சில துறைகளில், முக்கியமாக விவசாயத்தில், நிலம் ஒரு குழுவினருக்குச் சொந்தமாய் (collective ownership) இருந்தாலும், அரசாங்கச் சொந்தத்தை அடிப்படையாகக் கொண்ட உற்பத்திப் பொது முறைக்கு, இக்குழுக்கள் கீழ்ப்பட்டிருக்கின்றன.) அவ்வாறான முறையில் பணத்தின் அலுவல்கள் யாவை ?

பிற நாடுகளைப் போன்றே நோட்டுகளும் நாணயங்களும், சோவியத் யூனியனிலும், மக்களின் தேவைக்கான பரிவர்த்தனைக் கருவியாகப் பயன்படுகின்றன. பெருத்தப் புரட்டல்களுக்குச் (transactions) செக்குகள் (cheques) பரிவர்த்தனைச் சீட்டுகள் (bills of exchange) உபயோகப் படுத்தப் படுகின்றன. உற்பத்திக்குப் பாங்குகள் கடன் கொடுத்து உதவுகின்றன. ஆகவே மேலெழுந்த வாரியாகப் பார்க்கும் பொழுது, சோவியத் யூனியனில் பணத்தின் உபயோகத்திற்கும், பிற நாடுகளில் பணத்தின் உபயோகத்திற்கும் யாதொரு வேறுபாடுமில்லை.

சோவியத் யூனியனில் பணத்திற்கும் விலைகளுக்கும் உள்ள தொடர்பைக் கவனித்தால், பிற நாடுகளுக்கும் சோவியத் யூனியனுக்கும் உள்ள வேறுபாடு தெளிவாக விளங்கும். விலைகள் உயரலாம்; ஆனால் உற்பத்தித் தட்டால் இது ஏற்படுவதில்லை. அதனால் உற்பத்தி நேரிடையாகப் பாதிக்கப்படுவதுமில்லை. விலைகள் இறங்கலாம்; ஆனால் இவ்விறக்கம் கிராக்கிக் குறைவால் ஏற்படுவதில்லை. இதனால் உற்பத்தி குறைவதும் இல்லை. சுருங்கக் கூறின், விலைவாசிகள் இயக்கம் (movement of prices) சப்ளைக்கும், கிராக்கிக்கும் உள்ள தொடர்பால் நிர்ணயிக்கப்படுவதில்லை. உற்பத்தியின் அளவும் விலைவாசிகள் இயக்கத்தால் நிர்ணயிக்கப்படுவதில்லை. உற்பத்திச் சாதனங்களின் பெருக்கம் (increase in the means of production) முதலீடு செய்பவர்களின் (investors) லாப நோக்கால் நிர்ணயிக்கப் படுவதில்லை.

தொழிலாளர், எந்திரம் இவைகளின் தற்போதைய உற்பத்தி சக்தி, உற்பத்தி அளவுக்கு வரம்பு. ஏனெனில், வாங்கும் சக்தி தொழிலாளர்களின் கூலியைப் பொறுத்தில்லை; உற்பத்தியாகும் பொருள்களின் அளவையே பொறுத்திருக்கிறது. உற்பத்தியான எல்லாப் பொருள்களும் விற்கும்படி விலைகளும் கூலிகளும் ஒவ்வொரு ஆண்டும் நிர்ணயிக்கப்படுகின்றன. உற்பத்தி பெருகினால், கூலியாகக் கொடுக்கப்படும் தொகையும் உயரும். உற்பத்திக்கும் பிரிவினைக்கும் உள்ள இந்நிரந்தரத் தொடர்பு (constant relation between production and distribution) அமைப்புச் சீராக ஏற்படுவதற்குச் சிலகாலம் பிடித்தது.

பண முறையின் அடிப்படை (the basis of the whole money system) உற்பத்தித் திட்டமே. உற்பத்தித் திட்டத்தை இரு கூறாகப் பிரிக்கலாம். ஒன்று உடனடியாக

உதவும் பொருள்கள் (articles of consumption); மற்றென்று உற்பத்திச் சாதனங்கள். (கட்டடம், எந்திரம், இருப்புப்பாதை, கப்பல் முதலியன.) தற்பொழுது இருக்கும் உற்பத்திச் சாதனங்களை எவ்வாறு, எவ்வளவு ஒவ்வொரு கூறுக்கும் பயன்படுத்த வேண்டுமென்பதை அரசாங்கமே அறுதியிடுகிறது. இதையே வேறு வகையாகச் சொல்வோமானல், எவ்வளவு எந்திரமும் உழைப்பும் கூடுதலாக உற்பத்திச் சாதனங்களைச் செய்வதற்கும், எவ்வளவு உடனடியாக உதவும் பொருள்களை உற்பத்தி செய்வதற்கும் பயன்படுத்தவேண்டும் என்று அரசாங்கம் தீர்மானிக்கிறது. எவ்வளவு உடனடியாக உதவும் பொருள்கள் உற்பத்தியாகும் என்பதை மதிப்பிட்டு, முக்கியத் தொழில்களான விவசாயம், தொழில் இவற்றில் உழைப்போர், நிர்வாகத்தில் வேலை செய்வோர், உத்தியோகஸ்தர், போர் வீரர், சிவில் உத்தியோகஸ்தர் இவர்களுக்கு இவ்வளவு, இவ்வளவு என்று ஒதுக்கப்படுகிறது. ஆனல் ஒவ்வொரு பிரிவினருக்கும் இவ்வளவு பவுண்டு உருளைக் கிழங்கு, இவ்வளவு கஜம் துணி என்று ஒதுக்குவதில்லை. சில சமயங்களில் பொருள்களை இவ்வாறு பங்கீடு (ration) செய்வது இன்றியமையாததாக இருக்கலாம், போர்க் காலத்தில் போரில் ஈடுபட்ட நாடுகளில் பங்கீடு இன்றியமையாததா யிருப்பது போல.

ஒவ்வொரு வகுப்பாருக்கும் இவ்வளவு பணம் என்று ஒதுக்கப்படுகிறது. இதையே வேறு வகையாகச் சொன்ஞல் ஒவ்வொரு முக்கிய பொருளின் விலையும் அறுதியிடப்பட்டு, உற்பத்திப் பொருள்களின் மொத்த விலையின் அடிப்படையின் பேரில், உற்பத்தியான பொருள்கள் முற்றும் வாங்குவதற்குத் தேவையான பணம், மக்களில் ஒவ்வொரு பிரிவினருக்கும் கூலியாகவோ, படியாகவோ (allowance) கொடுக்கப்படுகிறது. பத்தாண்டுகளுக்கு

மேல் திட்டப்படி உற்பத்தியும், பிரிவினையும் (distribution) நடந்திருப்பதால், எவ்வளவு உற்பத்தியாகிறது என்பதையும், எவ்வெவ் வகையான பொருள்களை மக்களில் எவ்வெவ் சாரார் உபயோகிக்கின்றனர் என்பதையும், கூடுமான வரையில் திட்டவட்டமாக இப்பொழுது கணக்கிட முடிகிறது. அடியிலிருந்து விநியோகத்தைக் கட்டுவதல்ல அப்பிரச்சினை (it is not so much a question of building up an allocation from the begining). சென்ற ஆண்டைவிட பொருள்கள் உற்பத்தியில் சிலவற்றில் 10%ம், சிலவற்றில் 20%ம் கூட்டுவதும், கூலிகள், படிகளையும் அம்மாதிரி கூட்டுவதுமே அப்பிரச்சினை.

இதுகாறும் கூறியதிலிருந்து சோவியத் யூனியனில் பணம் முதல் (capital) ஆக இயங்குவதில்லை என்பது புலப்படும். அதாவது பணத்தைக் கொண்டு பணத்தைப் பெருக்குவது அங்கில்லை. தனிப்பட்டவர் உற்பத்திச் சாதனங்களையோ, பிறரின் உழைப்பின் சக்தியையோ அங்கு வாங்க முடியாது.

முதலாளித்துவ நாடுகளில் உள்ளது போன்று அதே மாதிரி சோவியத் யூனியனில் பணம் பரிவர்த்தனைக் கருவியாக இயங்குவதில்லை. லாபத்துக்காக அன்றி, உபயோகத்துக்காக மட்டும் பொருள்கள் உற்பற்தியாகும் ஒரு திட்டத்தில், 'பரிவர்த்தனை மதிப்பு' என்ற சொற்றொடர் செல்லத்தக்கதல்ல. பொருள்களின் விலைகளுக்கும், அவைகளின் உற்பத்திக்காகும் நேரத்திற்கும் இம்முறையில் தொடர்பு இருக்கவேண்டிய அவசியமில்லை. சாமான்கள் பணத்திற்கு வாங்கப்படுகின்றன. கூலிகளும் (ஓரளவாவது) பணமாகத்தான் கொடுக்கப்படுகின்றன. ஆனால் இவ்விரு உதாரணங்களிலும், பணம், ஒரு சொந்தக்காரரிடமிருந்து இன்னொரு சொந்தக்காரருக்குப் பொருள்களை மாற்றும் பரிவர்த்தனைக் கருவியாகப் பயன்பட

வில்லை. விநியோகத்திற்காகச் (distribution) செய்யப்பட்ட பெருள்களை விநியோகிக்கும் கருவியாகப் பணம் பயன்படுகிறது. அவ்வாருன முறையில் தான் ஒரே ரக சாமான்களுக்கு அடுத்தடுத்தக் கடைகளில் வெவ்வேருன விலைகள் இருக்கமுடியும். எடுத்துக்காட்டாக, ஒரு விலைக்கு (சிறிது குறைந்த விலைக்கு) ஆலைத் தொழிலாளிகளுக்கும், (அதே சாமான்களை) அதிக விலைக்கு பிற நாட்டிலிருந்து சுற்றிப்பார்க்க வருபவர்களுக்கும், அதிகச் சம்பளம் பெறும் உத்தியோகஸ்தர்களுக்கும், அதிக விலைக்கு விற்கிருர்கள்.

பல திறப்பட்ட பிரிவுத் தொழிலாளர்களுக்குக் கொடுக்கப்படும் கூலி வீதங்களும், வெவ்வேறு காலங்களில் இப்பிரிவினர் கொடுக்கும் விலைகளும், அவ்வப் பிரிவினரின் தேவைகளுக்கேற்ப நிர்ணயிக்கப்படுகிறது. அதே போன்று வெவ்வேறுபட்ட தொழில்களின் தேவைகளுக்கு ஏற்பவோ அல்லது ஒரு குறிப்பிட்ட தொழில் நுணுக்கப் (technical) பயிற்சியுள்ள தொழிலாளர்களை அதிகம் ஈர்க்க ஏற்றவாறே, வெவ்வேறு காலங்களில் இப்பிரிவினர் கொடுக்கும் விலைகள் அறுதியிடப் படுகின்றன. எடுத்துக்காட்டாக ,கனத்தொழிலைத் (heavy industry) துரிதமாக அபிவிருத்தி செய்யவேண்டுமென்ருல், இலேசான தொழிலை (light industry) விட இதற்கு அதிகக் கூலி தரப்படும். திறமான தொழிலாளிகளும் (skilled workers), தொழில் நுணுக்க ஆட்களும் (technical workers) அதிகம் வேண்டும் என்ருல், இந்த ரகத் தொழிலாளிகளின் கூலி வீதங்கள் உயர்த்தப் படும். ஏனெனில், அப்பொழுதுதான் இத்தொழிலில் சேர்ந்து அதிகக் கூலியைப் பெறுவதற்காகப் பலர் இதற்கான பயிற்சி பெற முன்வருவார்கள். இதில் முக்கிய அம்சம் என்னவெனில், உற்பத்தி, விநியோகம் (production

and distribution) திட்டத்தின் ஓர் பாகமாகக் கூலி விதங்கள் தீர்மானிக்கப்படுவதே. உற்பத்தியான பொருள்கள் யாவும், உற்பத்தி மேன்மேலும் பெருகத்தக்க விதத்தில் கூலிகள் மூலம் மக்களிடை விநியோகிக்கப்படுகின்றன. கூலிக்காக உபயோகிக்கும் பணம் ஓர் விநியோகக் கருவியே.

ஏற்கனவே குறிப்பிட்டது போல் ஓர் அரசாங்க டிரஸ்டி (state trust) லிருந்து இன்னொரு அரசாங்க டிரஸ்டுக்குப் பெருவாரியாகச் சாமான்களை விற்கவும் பணம் பயன்படுத்தப்படுகிறது. திருஷ்டாந்தமாக அரசாங்க மின்சார டிரஸ்டுக்கு நிலக்கரி வேண்டுமென்றால், அது அரசாங்க நிலக்கரி டிரஸ்டுக்குப் பணம் கொடுக்க வேண்டும். இவ்வகை மாற்றங்களில் (transactions) பணம் உபயோகிப்பதின் நோக்கம் யாது?

இரண்டும் அரசாங்க உடைமைதான். முதலாளித்துவ நாட்டில் கூட இரு தொழில்கள் ஒரே நபருக்குச் சொந்தமாயிருக்குமானால், அவர் இரண்டுக்கும் தனித்தனிக் கணக்குகள் வைத்துக் கொள்கிறார். அவை ஒன்றுக்கொன்று பணமும் கொடுக்கலாம். ஒவ்வொரு தொழிலும் திறமையாக வேலை செய்கின்றதா என்பதைக் கண்டுபிடிக்க இவ்வாறு தனித்தனிக் கணக்கு வைத்துக்கொள்ள வேண்டியதும், ஒன்றுக்கொன்று கொடுப்பதும் இன்றியமையாதது. இதுதான் சோவியத் யூனியனில் அரசாங்கத்திற்குச் சொந்தமான தொழில்களில் பணம் கைமாறுவதற்கும் காரணம். தற்போதுள்ள நிலையில், பணத்தில் கணக்கிடுவது (money accounting), பொருள்களில் கணக்கிடுவதை (accounting in things) விடச் சுலபமானது. இவ்வகையால், ஒவ்வொரு அரசாங்கத் தொழிலிலிருந்து வரும் வருமானம் அதன் செலவுக்குக் 'கட்டுபடியாகிறதா' என்று பார்க்க முடிகிறது. ஒவ்வொரு தொழிலிலிருந்தும்

எவ்வளவு "லாபம்" கிடைக்கிறதென்று கணக்கிடுவதில்லை. குறைந்தபக்ஷ மனித உழைப்புக்கு அதிக பக்ஷ உற்பத்தி ஆகிறதா என்பதைப் பார்க்கவே இம்முறை. ஒரு தொழில் "கட்டுபடியாகாவிடில்" அதன் மூடுவிழாவை நடத்த வேண்டுமென்று பொருளல்ல. சிறந்த எந்திரம், தொழிலாளிகளுக்குச் சிறந்த பயிற்சி, சிறந்த நிர்வாகம் இவற்றின் மூலம் அடுத்த ஆண்டிலாவது எதிர்பார்த்த விளைவுகள் ஏற்பட நிர்வாக நடவடிக்கைகள் எடுக்கப்படுகின்றன. உற்பத்திதான் தலையாயது; ஏனெனில், மக்களுக்கு அவ்வுற்பத்திப் பொருள்கள் தேவை. அது திருப்திகரமாக நடக்கிறதா இல்லையா என்பதைச் சுட்டிக் காட்டும் கைகாட்டியாக, ஒரு தொழில் 'கட்டுபடியாகிறதா' அல்லது 'கட்டுபடி யாகவில்லையா' என்பது கொள்ளப் படுகிறது. அத்தொழில் எங்ஙனம் இயங்கினாலும் உற்பத்தி நிறுத்தமோ, உற்பத்திக் குறைவோ ஏற்பட்டு, அதனால் மக்கள் தங்களுக்குத் தேவையானவற்றை இழக்க சோவியத் அரசாங்கம் ஒருபோதும் இணங்காது.

சோவியத் யூனியனில் உற்பத்தி, விநியோகத் திட்டத்திற்கு (plan of production and distribution) பணக் கைமாற்றங்கள் (money transactions) அடங்கியவையே ஒழியத் தனிப்பட்ட முக்கியத்துவம் வாய்ந்தவையல்ல. சோவியத் யூனியனில் பணம் 'காபிடல்' (capital) ஆக ஆவதில்லை. பணம் வைத்திருப்பவர் பணத்தைக் கொண்டு பணத்தைப் பெருக்க முடியாது. ஆகவே உற்பத்தியும், உற்பத்தியால் மனிதத் தேவைகளைப் பூர்த்திசெய்வதும், உற்பத்திச் சாதனங்கள் ஒரு தனிப்பட்ட நபருக்குச் சொந்தமாயிருப்பதைச் சார்ந்திருக்கவில்லை.

ஆனால் இதற்கு ஒரு விலக்கு உண்டு. சோவியத் யூனியனில் யாரும் தன் கூலியில் சிறிதைச் சேமித்து, அதை அரசாங்கத்திற்குக் கடனாகக் கொடுத்து வட்டி பெறலாம். மேலெழுந்த வாரியாகப் பார்க்கும் பொழுது

இதற்கும், முதலாளித்துவ நாடுகளில் மக்கள் அரசாங்கத்திற்குக் கடன் கொடுத்து வட்டி பெறுவதற்கும் யாதொரு வேறுபாடும் இல்லை. ஆனால் இவ்வகையிலும் சோவியத் யூனியனில் பணம் பிரத்தியேக முறையில் பயன்படுகிறது. அதற்கீடு முதலாளித்துவ நாடுகளில் இல்லை.

தன் வரவு செலவுத் திட்டம், உற்பத்தி, விநியோகத் திட்டம், இவற்றைத் தயாரிக்கும் பொழுது சோவியத் அரசாங்கம் ஓரளவு செலவினத்திற்கும் வழி செய்கிறது. இது எந்திரம், மூலப்பொருள்கள், தொழிலாளர் இவர்களுக்காகச் செலவழிக்கப்படுகிறது. அதேபோழ்து ஓரளவு வருவாய்க்கும் வழி செய்கிறது. இவ்வருவாய், வரிகள், அரசாங்கத் தொழில்களிலிருந்து கிடைக்கும், உபரித் தொகைகள் (surpluses made by state concerns) மக்களிடமிருந்துக் கடன்களாகப் பெற்ற தொகைகள் இவைகளிலிருந்து பெறப்படுகிறது. கடன்களை வரவினத்தில் காண்பிப்பதற்குப் பதிலாகச் செலவினத்தில் கூலிகளையும் சம்பளங்களையும் குறைத்துத் தன் வரவு செலவுத் திட்டத்தைச் சரிக்கட்டலாம். ஆனால் இம்முறையைப் பின்பற்றுவதால் தனிப்பட்டவர்கள் தத்தம் இச்சைப்படி செலவு செய்ய ஏதுவாகிறது. இதனால் அதிகத் தேவையுள்ளவர்கள் தங்கள் தேவைகளைப் பூர்த்தி செய்து கொள்ளவும், குறைச்சலான தேவையுள்ளவர்கள் தாங்கள் மீத்துவைப்பதை அரசாங்கத்திற்குக் கொடுத்துதவி, அரசாங்கத்தார் உற்பத்தியை வருகிற ஆண்டுகளில் பெருக்கி, மக்களின் அதிகமான தேவைகளைப் பூர்த்தி செய்வதற்குத் துணை புரியவும் ஏதுவாகின்றது. அரசாங்கத்திற்குக் கடன் கொடுத்தவரின் தேவைகள் அதிகரிக்கும் பொழுது, அவர் மீண்டும் அரசாங்கத்திலிருந்து பணத்தைப் பெற்றுத் தன் தேவைகள் யாவற்றையும் பூர்த்தி செய்து கொள்ள முடியும். அதற்குள் உற்பத்தியும் பெருகியிருக்கும். உண்மையில் சோவியத் யூனியனில், பிறவழிகளில் பணம்

பயன்படுவது போன்றே, அரசாங்கக் கடன்களும் விநியோகத்திட்டத்தின் (plan of distribution) ஓர் அம்சமாக இருக்கின்றன. பணம் அரசாங்கக் கடனில் போடப் படுவதால், ஓராண்டில் குறைச்சல் அளவு உடனடியாக உற்பத்தி செய்யும் சாமான்களை விநியோகிப்பதற்கும், பின்வரும் ஆண்டுகளில் உற்பத்திச் சாதனங்கள், மூலப் பொருள்கள், தொழிலாளர்கள் இவற்றின் பேரில் செல விட்டுப் புதிய ஆலைகள் கட்டுவதற்கும், புதிய சுரங்கங்கள் தோண்டுவதற்கும், பிற பொருள்களின் உற்பத்தியைப் பெருக்குவதற்கும் துணை செய்கிறது.

அங்ஙனமாயின் வட்டி ஏன் கொடுக்கப்பட வேண்டும் என்ற கேள்வி எழுகிறது. முதலாளித்துவ சமூகத்தின் தனிப்பட்ட மனப்பான்மையை (individualist outlook) மக்கள் இன்னும் மறக்காததால், சமூகத்திற்கு நன்மை செய்ய ஒரு தூண்டுகோலாகவே பணம் பயன்படுத்தப்படுகிறது. எல்லாத் துறைகளிலும் எல்லோர் தேவைகளையும் பூர்த்தி செய்யும் அளவுக்கு உற்பத்தி பெருகினால், அப்பொழுது கடன் கொடுப்பதிலோ, வட்டி கொடுப்பதிலோ, அர்த்தம் இருக்காது.

அப்பொழுது பணத்திலும் அர்த்தம் இருக்காது. மேலே கூறியவாறு வரும் வாரத்திற்கு உழைக்கத் தொழிலாளர்களுக்கு இன்றியமையாத உழைப்பின் விலையாகக் கூலி கருதப்படுவதில்லை. மொத்த உற்பத்தியில் ஒவ்வொரு தொழிலாளிக்கும் கிடைக்கும் பங்கையே கூலி குறிப்பிடுகிறது. உற்பத்தி அதிகரிக்க அதிகரிக்க, இப்பங்கும் அதிகரிக்கிறது. ஆனால் அடுத்த வாரம் வேலை செய்வதற்கு ஏற்ற வகையில் உடலை நன்னிலையில் வைத்திருக்க வேண்டிய அளவுக்குமேல் அக்கூலி விகிதம் இருக்கிறதா என்று யோசிப்பதில்லை.

ஆனால் ஒவ்வொருவருக்கும் விநியோகிக்கப்படும் பணத்தின் அளவு ஒரு வரம்பை உடையது. இவ்வரம்பு ஒரு

வகையில் தொழிலாளர் தேவைகளைக் கட்டுப்படுத்து கிறது. எவ்வளவுதான் கூலியோ, சம்பளமோ உயர்ந்தாலும், அதுவும் ஒரு வரம்பை உடையதே. குறுணி பதக்கானுலும் பதக்குத்தானே—அதற்குமேல் இல்லையே. இதற்குள் தான் அவர்கள் 'நாலும்' செய்து கொள்ளவேண்டும். உற்பத்தி ஒரு வரம்புக்கு உட்பட்டு இருக்குமளவு கூலியும் சம்பளமும் ஒரு வரம்புக்கு உட்பட்டு இருக்கவேண்டியதே. ஒவ்வொருவரின் தேவைகள் அனைத்தையும் பூர்த்தி செய்யும் காலத்தை சோவியத் அரசாங்கம் எதிர் நோக்கியிருக்கிறது. அந்நிலையிலும் ஒரு வரம்பு இருக்கும். அது என்னவெனில், ஒவ்வொரு நபரும், சமூகத்திற்குத் தான் பொறுப்பாளி என்பதை உணர்வதே. ஆனால் இதற்கும், முதலாளித்துவ சமூக மனப்பான்மைக்கும் பெருத்த வேறுபாடு இருக்கிறது. உற்பத்தி பெருகப் பெருக ஒவ்வொருவருக்கும் விநியோகிக்கப்படும் அளவும் பெருகும். பெருகவே முதலாளித்துவ சமூகத்திற்கே இன்றியமையாத பத்திரமற்றதன்மை (feeling of insecurity) சிறிது சிறிதாக மறையும். ஆண் பெண் அடங்கலும் 'தனக்கென' வைத்திருக்கவேண்டும் என்ற மனப்பான்மையையும், பணப் பேராசையையும் சிறிது சிறிதாக விட்டொழிப்பர். அந்நிலையை எய்தியதும், மக்கள், சமூகத்திற்காகப் பணி செய்வதை, நிர்ப்பந்தத்தினுலோ, பசிக் கொடுமையினுலோ தம் பேரில் சமூகம் சுமத்திய சுமையாகக் கருதாமல், தம் மனம்போல் செய்யும் இயற்கையான பயிற்சியாகக் கருதுவர். ஏனெனில், அவர்கள் சமூக வாழ்வில் பரஸ்பரம் ஒருவருக்கொருவர் இருக்கும் பொறுப்பை உணர்கின்றனர்.

அந்நிலையில் பொதுவான வேலைக்கோ, தனிப்பட்டரக் வேலைகளுக்கோ (special kinds of work) வெகுமதி கொடுக்கவேண்டிய அவசியமில்லை. ஒவ்வொருவரும் உபயோகிக்கும் பொருளின் அளவையும் நிர்ணயிக்கவேண்டியதில்லை. ஒவ்வொருவரும் தன்வீட்டில் செய்யும்

இட்டிலி, தோசைக்கு விலை குறிப்பிடாதது போல் சாமான்களுக்கும் விலை குறிப்பிட வேண்டியதில்லை. பணத்தின் குறுக்கீடின்றியே உற்பத்தியும், விநியோகமும் நடக்கும். பணத்திற்கு ஒரு அலுவலுமில்லாததால் அதுவும் மறையும்.

அவ்வாறான சமூகத்தில் சக்கரம் ஒரு முறை பூரணமாகச் சுற்றிவிட்டது. பூர்வீக இனங்கள் பொருள்களை உற்பத்திசெய்து, அவைகளை வாங்காமலும், விற்காமலும் தங்களுக்குள்ளேயே பகிர்ந்து கொண்டனர். அதன்பின்பு மன்பதை பல மாறுதல்களை அடைந்து விட்டது. தனிப்பட்ட உடைமை (private property) தோன்றியது. ஒருவரிடமிருந்து இன்னொருவருக்குப் பாத்தியதைகளை (claims) மாற்றப் பணம் இன்றியமையாததாயிற்று. ஆனால் இறுதியான நிலையிலும், தனிப்பட்ட உடைமை மறைந்த பின்பு, நாம் இதுவரையில் கனவில்கூடக் கண்டிராத அளவு உற்பத்திப் பெருக்கத்தால் பணத்திற்கு வாங்காமலும் விற்காமலும், தாம் பாடுபட்டு உற்பத்தி செய்த பொருள்களைத் தமக்குள்ளேயே பகிர்ந்து கொள்ளும் சமுதாய முறை உருவாகும். அவ்விதமான சமுதாயம், மார்க்ஸ் கூறியாங்குத் தங்கொடியில், "திறமைக்கு ஏற்ற உழைப்பு; தேவைக்கு ஏற்ற கூலி" (from each according to his capacity, to each according to his need.) என்ற வார்த்தைகளை எழுதுவிக்கும்.

அந்நிலை அடையும்வரைப் பணம் இருக்கத்தான் செய்யும். பொருள்கள் உற்பத்தி, விநியோகம் இவற்றின் முக்கிய கருவியாகவும் இலங்கும். இருந்தாலும், பணத்தின் அலுவல்கள் பொதுவுடைமை நாட்டிலும் (socialist country), (அது பொதுவுடமையின் ஆரம்ப தசையில் இருந்தாலும்) முதலாளித்துவ நாட்டிலும் வேறுபட்டனவாகவே இருக்கும்.

# கலைச்சொல் விளக்க அகராதி

| தமிழ் | ஆங்கிலம் |
|---|---|
| அச்சுச் சமநிலைப் பரிவர்த்தனை | The Mint Par of Exchange |
| அடையாளப் பணம் | Token Money |
| அதிக நேரம் | Overtime |
| அதிக பக்ஷ நம்பிக்கை முறை | Maximum Fiduciary System |
| அந்நியச் செலாவணிகளின் பரிவர்த்தனை வீதங்கள் | Rates of Foreign Exchanges |
| அந்நியப் பரிவர்த்தனை | Foreign Exchange |
| அமித உற்பத்தி | Overproduction |
| அமிதப் பணப் பெருக்கம் | Excessive Inflation |
| அரசாங்கக் காகிதம் | Government Paper |
| அரசாங்கப் பத்திரம் | Government Bond |
| அரசியலில் ஸ்திரமற்ற தன்மை | Political Instability |
| அலகு | Unit |
| அலோகப் பொருள்கள் | Non-metallic Commodities |
| ஆதார ஆண்டு | Base year |
| ஆதார சராசரி | Base Average |
| ஆர்டர் | Order |
| ஆஸ்திகள் | Assets |
| இடைநிலைப் பொருள்கள் | Intermediate Products |
| இன உடைமை | Tribal Property |
| உதவாக்கரைச் சேமிப்பு | Sterile Hoarding |
| உபயோகம் | Consumption |
| உபரி | Surplus |
| உலோகப் பணம் | Metallic Money |
| உழைப்பின் பாகுபாடு | Division of Labour |
| உறுதித் தொகைகள் | Insurance Premia |
| உறுதிமொழிச் சீட்டு | Promissory Note |
| உறுதியான ஆஸ்தி | Durable Asset |
| உற்பத்தி, சப்ளை | Supply |
| ஒதுக்கப்பட்ட அளவு | Quota |
| ஒப்புக்கொள்ளப்பட்ட சீட்டுகள் | Approved Securities |
| ஒருவகை மான் | Reindeer |
| ஒழுக்கத் தூண்டுகோல் | Moral Suasion |
| கடன் கடிதங்கள் | Letters of Credit |
| கடன் கருவிகள் | Credit Instruments |

| | |
|---|---|
| கடன் பத்திரங்கள் | Securities |
| கட்டளைப் பணம் | Fiat Money |
| கட்டி நற்சான்று | Bullion Certificate |
| கட்டுப்பாடு ஒப்பந்தங்கள் | Restriction Agreements |
| கட்டுப்பாட்டுக் கொள்கை | Policy of the controls |
| கண்டுகள் | Coils |
| கருவூலம் | Treasury |
| கழிவு வீதம் | Discount Rate |
| கனத் தொழில் | Heavy Industry |
| காகிதப் பணம் | Paper Money |
| காலங்கழித்துக் கொடுக்கப் படும் தொகைகள் | Deferred Payments |
| காலன் | Gallon |
| காலிகோ | Calico |
| கிராக்கி | Demand |
| குறியீட்டு எண் | Index Number |
| குறியீட்டு எண்ணுக்கு முக்கியத்துவம் கொடுத்தல் | Weighting an Index Number |
| குறுகிய காலக் கடன் பத்திரங்கள் | Short-term Securities |
| கூர்நுதிக் கோபுரம் | Pyramid |
| கையிருப்பு | Stock |
| கொடைகள் சமநிலை | Balance of Payments |
| சட்டபூர்வமான பணம் | Legal Tender Money |
| சட்டபூர்வமான விகிதம் | Legal Proportion |
| சத விகிதம் | Percentage |
| சதா கிராக்கி | Constant Demand |
| சமூகக் கடன் | Social Credit |
| சமூகக் கொடைகள் | Social Grants |
| சமூக வருவாய் | Social Dividend |
| சர்வதேசக் கடன் | International Indebtedness |
| சர்வதேசப் பணம் | International Money |
| சர்வதேச மதிப்புத் திட்டம் | International Standard of Value |
| சலனம் | Uncertainty |
| சவரன் | Sovereign |
| சிப்பம் | Packet |
| சிறுவாடு | Small Savings |
| சுயேச்சை வாணிகக் கொள்கை | Free Trade Policy |
| செக் | Cheque |
| செலாவணி | Currency |

| | |
|---|---|
| செலாவணி அலகு | Currency Unit |
| செலாவணியிலிருந்து ஓட்டம் | Flight from Currency |
| செழிப்பு | Boom |
| சேமிப்பு | Hoarding, Saving |
| டிகிரி | Degree |
| டிபாசிட்டு | Deposit |
| தங்க இயக்கங்கள் | Gold Movements |
| தற்காலிகமாக ரத்துச் செய் | Suspend |
| தனி உடைமை முறை | System of Private Property |
| திரவ ஆஸ்தி | Liquid Asset |
| திறந்த சந்தை நடவடிக்கைகள் | Open-Market Operations |
| திறமைக் கூடுதல் | Increased Efficiency |
| தீர்க்கும் நிலையம் | Clearing House |
| துணை நாணயங்கள் | Subsidiary Coins |
| துணைப்பணம் | Subsidiary Money |
| துண்டிப்பது | Sweating |
| தேசீய கையிருப்பு | National Reserve |
| தொகை | Quantity |
| நஷ்ட ஈடு | Reparations |
| நாணயமாக மாற்ற முடியாத காகிதப் பணம் | Inconvertible Paper Money |
| நிதி நிலையங்கள் | Financial Houses |
| நிதி முறை | Financial System |
| நிரந்தர ஊதியம் பெறுவோர் | Fixed Income Receivers |
| நிர்வகிக்கப்பட்ட செலாவணி | Managed Currency |
| நிஷ்கா | Nishka |
| நிலையான உடைமை | Fixed Property |
| நிலையியற் பொருள் | Immovable Property |
| நேரான மதிப்பு விகிதம் | Direct Value Ratio |
| நேர்மாறான | Inverse |
| நேர்வரி | Direct Tax |
| நோட்டு வெளியீட்டு நிர்வாகம் | Management of Note Issue |
| நோட்டு வெளியீட்டைக் கட்டுப்படுத்தும் முறைகள் | Methods of Regulating Note Issue |
| பங்கீடு | Rationing |
| பங்குப் பரிவர்த்தனை | Stock Exchange |
| பணக்கூலி | Nominal or Money Wage |
| பணச் சந்தை | Money Market |
| பணச் சுருக்கம் | Deflation |
| பணத் திட்டங்கள் | Monetary Standards |

| | |
|---|---|
| பணத்தின் தேசிய நிர்வாகம் | The National Control of Money |
| பணத்தின் மதிப்பு | Value of Money |
| பணத்தின் மதிப்பை அளத்தல் | Measurement of the Value of Money |
| பணப் படைப்பு | Creation of Money |
| பணப் பெருக்கம் | Monetary Inflation |
| பணப் பெருக்க சாத்தியம் | Inflational Potential |
| பணப்பெருக்க மின்மை | Disinflation |
| பணப் பெருக்கம் | Inflation |
| பணப் பொருளியல் | Money Economy |
| பணமில் பொருளியல் | Moneyless Economy |
| பண முறைகள் | Monetary Systems |
| பண வடிவங்கள் | Forms of Money |
| பண்டமாற்று | Barter |
| பண்டமாற்று ஒப்பந்தங்கள் | Barter Agreements |
| பத்திரம் | Security |
| பரிவர்த்தனைகள் | Transactions |
| பரிவர்த்தனைச் சமன் செய்யும் நிதிகள் அல்லது கணக்குகள் | Exchange Equalisation Funds or Accounts |
| பரிவர்த்தனைச் சீட்டுகள் | Bills of Exchange |
| பாங்கு | Bank |
| பாங்கு டிமாண்டு டிபாசிட்டு | Bank Demand Deposit |
| பாங்கு நோட்டு | Bank Note |
| பாங்குப் பணப் பெருக்கம் | Credit Inflation |
| பாங்குப் பணம் | Credit, Bank Money |
| பாங்கு வீதம் | Bank Rate |
| பாதாளக் கிடங்குகள் | Vaults |
| பாரம் | Weight |
| பாளங்கள் | Ingots |
| பாஸ் புத்தகம் | Pass Book |
| பிரதிநிதித்துவப் பணம் | Representative Money |
| பிரயாணிகளின் செக்குகள் | Traveller's Cheques |
| புத்தகக் கடன் | Book Debt |
| புள்ளி விவரக் கருவி | Statistical Device |
| புனர்க் கழிவு | Re-discount |
| பூரண அரசாங்கம் | Total Government |
| பூரண வேலை | Full Employment |
| பெகுஸ் | Pecus |
| பெய்கு | Faihu |

| | |
|---|---|
| பெரிய இணைக்கப்பட்ட கம்பெனிகள் | Great Consolidated Corporations |
| பெருவாரியான முதலீடு | Large-Scale Investment |
| பேரங்கள் | Transactions |
| பொது உரிமைகள் | Common Rights |
| பொதுநலப் பணிகள் | General Utility Services |
| பொது நிதி | Common Pool |
| பொது வேலைகள் | Public Works |
| பொருளியல் கட்டுப்பாட்டின் வரவு செலவுத் திட்ட முறைகள் | Budgetary Methods of Economic Control |
| பொருளியல் நடவடிக்கை | Economic Activity |
| பொருளியல் நெருக்கடிகள் | Economic Crises |
| பொருளியல் மதிப்புகள் | Economic Values |
| பொறுப்புகள் | Liabilities |
| பொன் இருப்புத் திட்டம் | The Gold Reserve Standard |
| பொன் கட்டித் திட்டம் | The Gold Bullion Standard |
| பொன் சவரன்கள் | Gold Sovereigns |
| பொன் செலாவணித் திட்டம் | Gold Circulation or Currency Standard |
| பொன் திட்டத்தின் அலுவல்கள் | Functions of the Gold Standard |
| பொன் திட்டத்தின் முறிவு | The Breakdown of the Gold Standard |
| பொன் திட்டத்தின் வகைகள் | Forms of the Gold Standard |
| பொன் திட்டத்தின் விதிகள் | Rules of the Gold Standard |
| பொன் திட்டம் | The Gold Standard |
| பொன் நாணயத் திட்டம் | The Gold Specie or Coin Standard |
| பொன் பரிவர்த்தனைத் திட்டம் | The Gold Exchange Standard |
| மதிப்பின் சேர் | Store of Value |
| மதிப்பு | Value |
| மத்திய பாங்கு | Central Bank |
| மந்தம் | Slump |
| மானியங்கள் | Subsidies |
| மிதப் பணப் பெருக்கம் | Reflation |
| முக்கூட்டுப் பண உடன்பாடு | Tripartite Monetary Agreements |
| முடிந்த பொருள்கள் | Finished Products |

| | |
|---|---|
| முதலீடு | Investment |
| முதலீடு செய்பவர்கள் | Investors |
| முழுப்பொன் திட்டம் | The Full Gold Standard |
| முழு மதிப்புள்ள பணம் | Full-Bodied Money |
| மூலப் பொருள்கள் | Raw Materials |
| மெய்க் கூலி | Real Wages |
| மைல் | Mile |
| ரூபா, ரூபாய் | Rupee |
| ரொக்கம் | Cash |
| லினன் | Linen |
| வரம்பில் சட்டபூர்வமான பணம் | Unlimited Legal Tender Money |
| வரம்புச் சட்டங்கள் | Statutes of Limitation |
| வரையறுக்கப்பட்ட நம்பிக்கை முறை | The Fixed Fiduciary System |
| வரைவு | Draft |
| வாங்கும் சக்தி | Purchasing Power |
| வாங்கும் வரிகள் | Purchase Taxes |
| வாணிகப் பாங்குகள் | Commercial Banks |
| வாழ்க்கைச் செலவுக் குறியீடு | Cost of Living Index |
| விகித இருப்பு முறை | Proportional Reserve System |
| விகிதங்கள் | Ratios |
| விகிதம் | Proportion |
| வியாபாரச் சக்கரம், சகடம் | Trade Cycle |
| வியாபார நிலையங்கள் | Business Houses |
| விலைக் குறியீட்டு எண்கள் | Price Index Numbers |
| விலை மாறுதல்கள் | Price Changes |
| விலைவாசிகள் மாறாமை | Stickiness of Prices |
| விலைவாசிக் கட்டுப்பாடுகள் | Price Controls |
| வில்லங்கமில்லாத ஒப்புக்கொள்ளப்பட்ட கடன் பத்திரங்கள் | Unencumbered Approved Securities |
| விளையாட்டின் விதிகள் | Rules of the Game |
| வீசல் | Weasel |
| வீதக் கொள்கை | The Principle of Ratios |
| வெண்ணிலைக் கடன்கள் | Floating Debts |
| வெளியீட்டு அதிகாரிகள் | Issuing Authorities |
| வேலையின்மைத் திட்டங்கள் | Unemployment Schemes |
| ஹோல்டிங் கம்பெனிகள் | Holding Companies |
| ஷெடியூல்டு பாங்குகள் | Scheduled Banks |